# இராஜராஜேச்வர விஜயம்

நாட்டிய இலக்கியம்

டாக்டர் இரா. நாகசாமி

வரலாற்றுப் பேரவை

# முன்னுரை

''இராஜராஜேச்வர விஜயம்'' என்னும் இந்த நாட்டிய இலக்கியம், கி. பி. 985இல் தஞ்சை அரியணையில் ஏறிய முதலாம் இராஜராஜ சோழனின் வாழ்க்கையையும், சிறந்த சிவபக்தனாகத் திகழ்ந்து தஞ்சாவூரில் 'இராஜ ராஜேச்சுரம்' என்னும் பெருங்கோயில் எடுத்ததையும் சித்தரிக்கும் படைப்பாகும். 1985இல் இராஜராஜன் அரியணை ஏறி ஆயிரம் ஆண்டுகள் ஆவதை ஒட்டி அப் பெரு மன்னனுக்கு நான் சூட்டும் இசை மாலையாக இதை இயற்றியுள்ளேன்.

இதற்கு முன் நான் ஓரிரு விருத்தப்பாக்கள் இயற்றி யுள்ளேன். இசைப் பாடல்கள் இயற்றியது இல்லை. அதற்குரிய இசை நுணுக்கமோ, ஆற்றலோ எனக்கு இல்லை. இராஜராஜனின் வரலாறறைச் சிறப்பாக ஆராய்ந்தபோது அவன்மீது ஏற்பட்ட பெரு மதிப்பும், எனது காலஞ்சென்ற பேராசிரியர் டாக்டர் வெ. ராகவன் அவர்கள் என் உள்ளத்தே இருந்து அளித்த உள்ளுணர்ச்சி யுமே என்னை இப்பாடல்களை இயற்றத் தூண்டின. ஓரிரு இசைப் பாடல்களை இயற்றியபோது என் மனைவி பார்வதி அப்பாடல்களை நல்ல இனியு குரலில் ராகத் துடன் பாடியது, என்னை மேலும் ஊக்குவித்தது என்று கூறிக்கொள்வதில் பெருமை கொள்கிறேன். இதை முற் றிலும் பரத நாட்டிய மரபில் நாட்டிய நாடகமாக உரு வகித்து இயற்றியுள்ளேன். இப்பாடல்கள் அனைத் திற்கும் எனது மனைவி இராகம் அமைத்துள்ளார். இராகம் அமைத்தது மட்டுமல்ல, அவ்வப்போது பல நண்பர்களிடம் பாடியும் காட்டியுள்ளார். அந்தந்த காட்சிக்கு ஏற்ப உணர்ச்சிக்கு ஏற்ப, இராகம் அமைக்கப் பட்டுள்ளது.

இந்த நாட்டிய இலக்கியத்தை முழுமையாக தொடர்ந்து தமது இலக்கிய மாத இதழான "அமுதசுரபி"யில் அதன் ஆசிரியர் டாக்டர் விக்கிரமன் அவர்கள் வெளியிட்டு ஊக்குவித்தார்கள். அவர்களது அன்பு உள்ளத்துக்கு என் நன்றி.

இதை மிகவும் குறுகிய காலத்தில், நண்பர் டாக்டர் மே. து. ராசுகுமார் அவர்கள் அச்சிட்டு அன்புடன் உதவியமைக்கு நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந்நூலை 1985, பிப்ரவரி மாதம் சிதம்பரத் திருப் பதியில் மகாசிவராத்திரியை ஒட்டி நடைபெறும் நாட்டி யாஞ்சலி விழாவில் வெளியிடவும், அவ்விழாவில் இதில ஒரு பகுதியை நாட்டியமாகப் படைக்கவும் என்னை ஊக்குவித்த விழாக் குழுவினருக்கும் குறிப்பாக குழுவின தலைவர் உயர்திரு ஜி. வாகீசம் பிள்ளை அவர்கட்கும, செயலாளர் உயர்திரு கே. சுவாமிநாதன் அவர்கட்கும் என் உளமார்ந்த நன்றி கலந்த வணக்கத்தைத்தெரிவித்துக் கொள்கிறேன்.

இராஜராஜனுக்கு ஆடவல்ல பெருமானிடம் ஈடு இணையில்லாத பக்தி ஆதலின் 'சிவபாதசேகரன்' என்பது பட்டப் பெயர் என்பதை நினைவு கூர்தல் வேண்டும்.

தில்லைத் திருப்பதி விழாவில் ஆடவல்ல பெரு மானின் திருவடிகளில் இதை அட்டித் தொழுகின்ற பேறு சிவனருளால் அன்றோ கிட்டியது என எண்ணி எண்ணி உள்ளம் பேருவகை எய்துகிறது.

மகாசிவராத்திரி 1985 இரா. நாகசாமி

# இராஜராஜேச்வர விஜயம்

## நாட்டிய இலக்கியம்

தஞ்சைப் பெருங் கோயிலைத் தோற்றுவித்த முதலாம் இராஜராஜசோழன் அரியணை ஏறியது கி. பி. 985இல் ஆகும். 1985ஆம் வருடத்துடன் சரியாக ஆயிரம் ஆண்டுகள் முடிவடைகின்றன. தமிழ் மக்களது கலை, கட்டிட நுணுக்கம், ஆட்சித் திறன், வெற்றிச் சிறப்பு முதலிய அனைத்துத் துறைகளிலும் அவனுக்கு ஈடு இணை இல்லை என்று எடுத்துக் காட்டும் தனிச் சின்னமாய்த் திகழ்கிறது தஞ்சை இராஜராஜேச்சுரம்.

திறனான புலமை எனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும் என்றான் பாரதி. இராஜராஜன் எடுத்த கோயிலை, அவன் வடித்துள்ள செப்புத் திருமேனிகளை உலகமே போற்றுகிறது. அந்தப் பெருமன்னன் அரியணை ஏறிய ஆயிரமாவது ஆண்டு விழாவை உலக விழாவாகக் கொண்டாட, அனைத்துலக அறிஞர்களும் பங்கு பெறும் விழாவாக நடக்க வேண்டும் என்பது எனது விருப்பம்.

தஞ்சைப் பெருங் கோயிலில் 'இராஜராஜேச்சுர நாடகம்' என்ற ஒன்று இராஜராஜன் காலத்திலேயே நடைபெற்றது எனக் கல்வெட்டுகளிலிருந்து அறிகிறோம். அது நமக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் இராஜராஜனின் வரலாற்றை மையமாகக் கொண்டு பெருங்கோயில் பரனின் புகழ் உணர்த்தும் நாட்டியமாக அது திகழ்ந்திருக்க வேண்டும்.

ஒட்டக்கூத்தர் பாடிய தக்கயாகப் பரணி என்ற நாட்டிய இலக்கியம், தாராசுரத்து (இராஜராஜ புரத்து)க் கோயிலைப் புகழ்வது போல, அக்கோயிலைத் தோற்றுவித்த இரண்டாம் இராஜராஜ சோழனின் சிறப்பைக் கூறுகிறது. அது போல இராஜராஜேச்சுவர நாடகம் திகழ்ந்திருக்க வேண்டும். அது இப்போது மறைந்து போனது நமது துரதிர்ஷ்டமே.

ஆயினும் அதே கருத்தை மனத்தில் கொண்டு ''இராஜ ராஜேச்வர விஜயம்'' என்ற பெயரில் இந்த நாட்டிய நாடகத்தை இயற்றியுள்ளேன். கல்வெட்டுகள், செப்பேடுகள், அக்கால இலக்கியங்கள், இசைப்பாக்கள் ஆகியவற்றைக் கொண்டு இராஜராஜன் வரலாறும், அந்தக் கோயிலின் வரலாறும் இந்நாடகத்தில் இடம் பெறுகின்றன. இராஜராஜனின் குழந்தைப் பருவத்தில் தொடங்குகிறது நாடகம்.

அருண்மொழியின் குழந்தைப் பருவம், அக்கன் குந்தவையின் அரவணைப்பு, அண்ணன் ஆதித்த கரிகாலன் வஞ்சகர்களால் கொல்லப்படுதல், தந்தை சுந்தர சோழர் பொன் மாளிகையில் துஞ்சுதல், அன்னை வானவன்மா தேவி உடன் உயிர் நீத்தல், இராஜராஜன் அரியணையை உத்தம சோழனுக்குத் தியாகம் செய்தல், இராஜராஜன் என்னும் பெயரில் பட்டாபிஷேகம் பூணல், வெற்றிவாகைகள், திருமுறை காணல், திருக்கோயில் எடுத்தல், திரு இராஜராஜேச்வரர் திருஉலா என்பதுடன் நாட்டியம் முடிகிறது. பாடல்கள் மரபு வழியிலும் பண்டைய இசை மரபிலும் அமைக்கப்பட்டுள்ளன. சிற்பங்கள் ஓவியங்களின் அடிப்படையில் ஆடை அணிகள் உருவாக்கப்பட வேண்டும் என்பது என் அவா.

# 1 அருண்மொழியின் குழந்தைப் பருவம்

## ஐங்கரன் காப்பு

(இராகம்-காம்போதி)

உலகெலாம் புகழ்பரப்பும்
    ஒப்பரும் தளியைத் தோற்றி
கலைநிலா சடைமேல் பூணும்
    கண்ணுதல் கழல்கள் பற்றி
தலைமிசைத் தாங்கி நாளும்
    தவமதாய்ப் பரவும் அன்பன்
அருண்மொழிக் காதை கூற
    ஐங்கரன் காப்புத்தானே.

அருண்மொழித் தேவனின் புகழ் உலகெங்கும் பரவக் காரணமாவது அவன் தோற்றுவித்த திருக்கோயில். அதைச் சிவபெருமான் மீது கொண்ட பக்தியால் எடுப்பித் தான். 'பக்தியின் பண்பு திருவடி சூடல்' என்பர் தமிழ் மறையோர். ஆதலின் கண்ணுதல் கழல்களைப் பற்றித் தலைமிசை தாங்கினான். ஆதலின் சிவபாதசேகரன் என்று மக்கள் அழைத்து மகிழ்ந்தனர். அவனது பூத உடல் மறைந்த போதும் பக்தி உரு மறையவில்லை. சிவபெரு மானின் அருகில் அமர்ந்து அவரின் அடியானாக என்றும் பரவுகிறான். ஆதலின் "பரவும் அன்பன்" என நிகழ் காலமாக்கிக் கூறியுள்ளேன். இக்கதை அருண்மொழியின் காதை.

## ஜய மங்களம்

(இராகம்-நாட்டை)

ஜய தஞ்ச புரிவாஸ
ஜய ராஜ ராஜேச
ஜய சோழ குலபால
ஜய மகாதேவ —ஜய

ஜய பிருகத் சதனேச
ஜயத்ரிபுர விஜயேச
ஜய மகாலிங்கேச
ஜய ஸர்வ புவனேச —ஜய

தவ ஸ்வரூப விசித்ராணி
தவ கடாக்ஷ விசிகாணி
தவ பாத யுகளாணி
ஜகத்ராண சமர்த்தாணி —ஜய

(இராகம்-அடாணா)

சரணு சரணு நிசும்பசூதனி
சரணு சங்கர தோஷணி
சரணு சர்வமகேச யோகினி
சரணு பைரவ பாமினி

—சரணு

சோழவம்ச சாம்ராஜ்ய தாயினீ
சர்வ சஸ்ய சம்ருத்திதாயினி
ராஜநீதி நைபுண்ய தாயினி
கீத நாட்யாதி கலாப்ரதாயினி

—சரணு

## அருண்மொழித் தாலாட்டு

[சுந்தர சோழனின் தேவி அருண்மொழியின் தாய் வானவன்மாதேவி அவனைத் தாலாட்டுவது]

(இராகம்-நீலாம்பரி)

சீர்கொண்ட தாமரையாள்
செல்வத் திருவுருவே
பார்எல்லாம் ஒளிபரப்ப
வந்துதித்த வெண்சுடரே
கார்பொழிய கழனியெலாம்
கதிர்விளைத்த காசிபனே
ஆருயிரே இளம்தளிரே
அருள்மொழியே தாலேலோ.

சிந்தனை ஆவினது
சீரிளங் கன்றினுக்காய்
மைந்தனையே தேர்க்காலில்
மாய்த்துகந்த மாமனுவே
பந்தணையாள் பாகனுக்கு
பலமாடம் எடுத்தவனே
குந்தவையின் பின்பிறநத
கோமகனே! கண்வளராய்

(இராகம்-ஷண்முகப்பிரியா)

மாந்தாதா வாய்வந்து
மண்ணுலகு புரந்தவனே
மாமலையில் புலிபொறித்துப்
புனற்பொன்னி யணைவகுத்தாய்
காகுத்தன் குலத்துதித்துக்
கடலடைத்த கண்மணியே
ஆதித்தன் பின்னவனே
அரும்சுடரே தாலேலோ

கானவன் கரத்தி ருந்து
புள்ளுயிரைக் காத்தவனே
வானவன் மாதேவியரின்
உதரத்தில் அவதரித்தாய்
மானவிற் கூர்மாமன்னன்
சுந்தரனின் திருச்செல்வ
கானவினிய எந்தன்
கற்பகமே தாலேலோ

சோழர் காலத்து செப்பேடுகளும், இலக்கியங்களும், சோழர்களது குலபாரம்பர்யத்தைக் கூறும் போது திருமாலில் தொடங்கி அவர்களது வம்சம் வந்ததாகக் கூறுவது மரபு. அதைப் பின்பற்றியே இராஜராஜனின் குலத் தொடக்கமாகத் திருமாலின் பாடல் தொடங்குகிறது. மேலும் அரசன் மக்களைக் காப்பவன். காத்தல் தொழில் திருமாலுடையது. ஆதலின் திருமாலின் அவதாரமாக அரசனைக் கூறுவது மரபு. "நாவிஷ்ணு : பிருத்விபதி:" என்று வடமொழியிலும், "திருவுடை மன்னனைக் காணில் திருமாலைக் கண்டேனே" என்று தமிழ்மொழியிலும் கூறுவர். இங்கு குழந்தை அருண்மொழி திருமாலாக உருவகிக்கப்படுகிறான். குழந்தையைத் தாலாட்டும் போது அவனது முன்னோர்களின் சிறப்பைக் கூறி அவர்களாகவே பாவித்தல் நமது மரபு. அந்த அடிப்படையில் இத்தாலாட்டுப் பாட்டுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவன் சூரியகுலத்து உதித்தவன் ஆதலின் உலகில் ஒளி பரப்ப வந்த வெண்சுடர் எனப்படுகிறான். சோழர் காசிப கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் ஆதலின் காசிபனே எனப்படுகிறான். அருண்மொழி தோன்றியதால் பல்லாயிரம் வேலி நிலங்கள் பண்செய்யப்பட்டு பயிர் நிலமாக்கப்பட்டன. அது இங்கு சுட்டப்படுகிறது.

சோழர் நீதிமுறை தவறாதவர் என்பதற்குத் தலைசிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தவன், மனுநீதி

சோழன். ஒரு பசுவின் கன்றுக்கு ஏற்பட்ட அநீதிக்காக, தனது மைந்தனை தேர்க்காலில் இட்டு புகழ்பெற்ற மனு ஒரு சோழர்குலத் தோன்றல்.

மையல்கூர்
சிந்தனை ஆவிற்கு முற்றத் திருத்தேரில்
மைந்தனை ஊர்ந்த மறவோன்

என்று அவனை விக்ரமசோழனுலா கூறுகிறது. ஆதலின் அருண்மொழி, மாமனுவாக உருவகிக்கப்படுகிறான். சோழர்குலத்து உதித்த கோச்செங்கண்ணான் சிவபெருமானுக்கு எழுபதுக்கும் மேற்பட்ட மாடக்கோயில் எடுத்து புகழ்பெற்றான். "எண்தோளீசர்க்கு எழில் மாடம் எழுபது செய்து உலகமாண்ட திருக்குலத்து வளச் சோழன்" என்று அவன் பாடப்பட்டுள்ளான. அருண்மொழி பெருங்கோயில் பல படைத்ததால் கோச்செங்கண்ணனாகக் கூறப்படுகிறான். கிருதயுகம், த்ரேதாயுகம் துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கு யுகங்களில் முதலாவதும் மிகவும் புண்ணியமே நிறைந்ததுமான கிருதயுகத்தில் ஆண்ட புகழ் பெற்ற மன்னன் மாந்தாதா என்பவன். கொடுமை என்பதே அறியாத நேர்மையாளன் என அவனுடைய ஆட்சி புகழ் பெற்றது. அவனது ஆட்சியில் கொடும்புலியும் புள்ளிமானும் ஒரே துறையில் நீர் உண்ணுமாம். அம் மாந்தாதா சக்கரவர்த்தி சோழர் குல முன்னோன் என செப்பேடுகளும் பாடல்களும் கூறுகின்றன.

பைந்தடத்
தாடு துறையில் அடுபுலியும் புல்வாயும்
கூட நீரூற்றிய கொற்றவன்

என அவனை உலாப் புகழ்கிறது. இத்தாலாட்டில் அருண்மொழி மாந்தாதாவாக உருவ்கிக்கப்படுகிறான், ஆட்சிச்

சிறப்பால்; இமயமலையில் புலிப்பொறி பொறித்து காவிரி யாற்றுக்கு அணைகட்டிய கரிகால் பெருவளத்தானை அனைவரும் அறிவர். அம்மாபெரும் மன்னனாக அருண் மொழி உருவகிக்கப்படுகிறான். கடலை அடைத்து இலங்கை தசமுகனை சம்கரித்த காகுத்தனாகிய அண்ணல் இராமபிரான் சோழன் என இலக்கியங்களும் கல்வெட்டும் கூறும். இங்கு இராஜராஜன் காகுத்தன் என்று உருவகம் பெறுகிறான். அருண்மொழிக்கு ஆதித்த கரிகாலன் என்ற அண்ணன் இருந்தான். அது இங்கு கூறப்படுகிறது.

கானத்து வேடன் ஒரு புறாவை எய்ய, அது சிபிச் சக்கரவர்த்தியின் மடியில் சரண்புக வேடன் கரத்திலிருந்து புறாவைக் காப்பாற்றினார். அவர் சோழர் குலத்தவர். அவருக்கு சிபிச்சோழர் என்றே பெயர்.

உலகறியக்
காக்கும் சிறுபுறவுக்காக களிகூர்ந்து
தூக்கும் துலைபுக்கத் தூயோனும்

இங்கே அருண்மொழி "சிபி" யாக உருவகம் பெறுகிறான். அருண்மொழி சுந்தரசோழருக்கும் வானவன் மாதேவி யாருக்கும் பிறந்தவன். இவை தாலாட்டில் இடம் பெற்றுள்ளன.

அன்னை வானவன் மாதேவியும் பிற பெண்களும் அருண்மொழியாகிய குழந்தையின் அழகைப் பிறருக்குக் காட்டல்.

**அருண்மொழியின் எழில் வர்ணனை**

**(இராகம்-கேதாரம்)**

1 மாதேவடிகளான
மழவரையர் மகளார்
ஆதரவுடனளித்த
ஆண்மைக் கழல்பூண்டு

பூதலம் முழுதினையும்
அளக்கவே விழைகின்ற
பாதங்களின் பாங்கு காணீரே
பாவைமீர் வந்து காணீரே

அருண்மொழி குழந்தையாக இருந்தபோது அவனது ஆற்றலுக்கும் பக்திக்கும் வித்திட்டவர்களில் இருவர் குறிப்பிடத்தக்கவர். அவனது தமக்கை வந்தியத் தேவனின் தேவி குந்தவை ஒருவர்; மற்றவர் கண்டராதித் தச் சோழரின் தேவி செம்பியன் மாதேவியார்.

செம்பியன் மாதேவியாரைக் குறிக்கும் கல்வெட்டுகள், "கண்டராதித்த தேவர் தேவியார், மழவரையர் மகளார், உத்தமச் சோழரை திருவயிறு வாய்த்த பிராட்டியார், மாதேவடிகளான செம்பியன் மாதேவியார்" எனக் கூறு கின்றன. ஆதலின் மாதேவடிகளான மழவரையர் மகளார் என்றது; வீரம்புகட்டியது அத்தேவியென்ப. அத்தேவி பூட்டிய கழலணிந்து பூதலம் அளந்தான் எனக் கருத்து. இராஜராஜன் தன் நாடு முழுவதையும் சீராக அளந்து வரிப் பொத்தகங்களில் எழுதி வைத்தான். ஆதலின் "உலகளந்த சோழன்" என்பது அவன் பட்டங் களில் ஒன்று. அவன் பிறந்ததும் பூதலம் அளக்க அவன் பாதங்கள் விழைந்தன என்பது தொனிப்பொருள். பூதலம் அளந்தவன் திருமால். அருண் மொழியை திருமாலாக உவமிப்பதும் இங்கு தொனிப் பொருளாம். ஆழ்வார் பாசுரம் இந்தப்பாடல் அமைப்பின் முன்னோடி.

(இராகம்-சாரங்கா)

2 வேள் புலத்து வேந்தரெலாம்
வீரச்சபதம் விட்டு
தாள் புனைந்து தம்முடைய
தலைமிசை தாங்கிடவே

வாளுடனே வேல்பற்றி
வீரம் விளைவிக்கும்
தோள்கள் இருந்தவா காணீரே
தோகை மயிலனையீர் காணீரே

'வேள்புலம்' என்பது சாளுக்கியர் நாடு. மு. இராகவையங்கார் அவர்களின் "வேளிர் வரலாற்றில்" இதை விரிவாகக் காண்க. இராஜராஜனுடன் போரிட்டவர்களில் மிகவும் வலி பொருந்தியவர்கள் சாளுக்கிய அரசர்கள். சாளுக்கியன் சத்யாச்ரயனை இராஜராஜன் போர்க்களத்தில் வென்று வாகை சூடியதை அவனது தஞ்சைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. பின்னர் நடக்கவிருக்கும் நிகழ்ச்சியை முன்னதாகவே அருண்மொழியாகிய குழந்தையின் தோள்கள் காட்டுகின்றன என முன் கூறல்.

(இராகம்-காபி)

3 திருமகளும் நிலமகளும்
தெரிந்தசீர் ஜயமகளும்
ஒருங்கிணைந்து உடன்நிலவ
ஓரிடமே வேண்டிடவும்
பெருமாளும் விரும்பி உடன்
பெற்றிஎன வந்துகந்த
திருமார்பிருந்தவா காணீரே
திருந்திழையீர் வந்து காணீரே

ஸ்ரீதேவி, பூமிதேவி, நீளாதேவி என மூன்று தேவியரைக் கொண்டுள்ள திருமாலுக்கு நிகர் இவன் என்ப. இவனது கல்வெட்டுகள் "திருமகள் போலப் பெருநிலச் செல்வியும் தனக்கே உரிமை பூண்ட" எனத் தொடங்குகின்றன.

(இராகம்-தன்யாசி)

4 அய்ப்பசித் திங்கள்
சதையநாள் அவதரித்து
ஒப்பிலை இவர்க்குநிகர்
எத்துறையும் என நிறுத்தி
இப்புவியில் புகழ்மலர
இன்னமுத இதழ்விரிக்கும்
செம்பவள வாயினைக் காணீரே
அருண்மொழி வாயினைக் காணீரே

அருண்மொழி ஐப்பசி மாதம் சதைய நக்ஷத்திரத் தன்று பிறந்தவன். ''சதயநாள் விழா உதியர்மண்டலம் தன்னில் வைத்தவன்'' என்று இவனைக் கலிங்கத்துப் பரணி போற்றும். இராஜராஜனது கல்வெட்டுகளையும் அவன் விட்டுச் சென்றுள்ள இலக்கியங்களையும் சின்னங் களையும் காணில் அவன் ஒவ்வொரு துறையிலும் மிகச் சிறந்தவனாகத் திகழ்ந்ததோடு ஈடு இணையற்றவனாக விளங்கினான் என்பது வரலாற்று ஆசிரியர் துணிவு. அதை இப்பாடல் கூறுகிறது. அருண்மொழி வாயினைக் காணீரே என்பதைக் காண்க.

(இராகம்-பைரவி)

5 மண்முழுதும் ஒருகொற்றக்
குடையின்கீழ் ஒதுங்க
விண்முழுதும் வென்றிபுகழ்
விரைவினில் விளங்க
எண்ணிலா எதிர்வேந்தர்
வாய்புதைத்து ஏவல்கேட்க
கண்விழிக்கும் எழிலினையே
காணீரே
கனங்குழையீர் வந்து
காணீரே

(இராகம்-மணிரங்கு)

6 வித்தகக் கோலங்கொண்ட
விண்ணவனை வேதியனை
மத்தகக் கரியின்தோலை
உரித்துடுத்த உத்தமனைச்
சித்தர்தம் அத்தனை
சென்னியின் மிசைசேர்க்கும்
கைத்தலங்கள் வந்து காணீரே
காரிகையீர் வந்து காணீரே.

குழவிப் பருவம் முதலே சிவபெருமானைச் சென்னியில் வைத்துப் போற்றியவன் இவன் எனக் காட்டப்படுகிறது. சிவபாதசேகரன் என்பது இவன் பெயர்.

ஆறு பாடல்களால் அருண்மொழிக் குழந்தையின் அழகு வர்ணிக்கப்பட்டது.

தளர்நடையிட்டு வருகிறான் குழந்தை. அவனை அக்கன் குந்தவைப் பிராட்டி நடை பயில்விக்கிறாள்.

(இராகம்—கானடா)

**பல்லவி**

அருண் மொழியே வருக-வருக
அருள் மொழியே வருக.

**அனுபல்லவி**

ஆதித்தனுடன் கூடி
அன்புடனே ஆடி
யானையுடன் பரி
ஏற்றம் அறிந்திட

—அருண்மொழியே

*சரணம்*

பொன்னி வளநாட்டின்
    பெரும்புகழ் நிலைத்திட
கன்னி வளநாட்டின்
    காவலும் பூண்டிட
மண்ணைக் குடிவரை
    மாப்படை செலுத்திட
அண்ணனுடன் இணைந்து
    இளவரசாற்றிட

— அருண்மொழியே

கன்னி வளநாடு என்பது பாண்டியர் நாடு. மண்ணைக் குடி என்பது இராஷ்டிரகூட அரசர்களின் தலைநகர் 'மான்யகேடம்'.

அருள்மொழி குழந்தையாக இருந்தபோது அவனது அக்கன் குந்தவையும், சிறிய பாட்டி செம்பியன் மாதேவி யாரும் பக்திப்பாடல்களை கற்றுக் கொடுத்தனர். இராஜ ராஜன் சங்கப் பாடல்களில் ஈடுபட்டு பிற்காலத்தில் தனது கல்வெட்டையே சங்கப் பாடல் மரபில் எழுதி யுள்ளான். இவனது திருக்கோயிலூர் கல்வெட்டில் சங்கப் பாடல் மரபும், கபிலரும் குறிக்கப்படுவதையும் சுட்டி ''திருக்கோயிலூர்ப் பாட்டு' என யான் எழுதியுள்ள பாடல் உரை காண்க. ஆதலின் சங்கப்பாடலும், பக்திப் பாட லும் இணைந்ததாக ஒரு பாடலைச் செம்பியன் மாதேவி யார் போதிப்பதாகப் புனைந்துரை. புறநானூற்றில் கடவுள் வாழ்த்தாக உள்ள

கன்னி கார்நறுங் கொன்றைக் காமர்
வண்ணமார்பில் தாரும் கொன்றை

என்னும் பாடலை இதற்கு எடுத்தாள்கிறோம். செம்பியன் மாதேவி கற்றுத் தந்ததாக இப்பாடலைக் கூறுகிறோம்.

இது கி. பி. 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பாரதம் பாடிய பெருந்தேவனாரால் இயற்றப்பட்டது என்பர் சிலர். இராஜராஜனுக்கும் காலத்தால் முற்பட்டது ஆதலின் கால முரண்பாடு இல்லை. (திருமுறை கண்ட காட்சி பின்னர் இவ்விலக்கியத்தில் இடம் பெறுவதால் தேவாரப்பதிகம் இங்கு எடுத்தாளப்படவில்லை.)

இராஜராஜசோழன் உணர்ச்சி மேலீட்டுடன் தமிழ் இலக்கியங்களைக் கற்றான். அதைப் பக்தி நிறைவுடன் புகட்டினார் செம்பியன் மாதேவியார். தமிழ் மொழி போல் சமஸ்கிருத மொழியையும் கற்று அவன் இருமொழி வல்லவனாகத் திகழ்ந்தான். குறிப்பாக, பக்தி இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டான். அக்கன் குந்தவை பிராட்டி "சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்திரம்" கற்றுத் தந்ததாக உரைப்பாம்.

(முதல் அங்கம் முற்றும்)

# 2 சுந்தர சோழரின் மறைவு

காஞ்சிபுரத்தில் பொன் மாளிகையில் அரியணையில் சுந்தரசோழர் அமர்ந்திருக்கிறார். அவருடன் வானவன் மாதேவியும் அமர்ந்திருக்கிறாள். அவர் முகத்தில் பெரு மிதம் காணப்படுகிறது. ஆதித்தன், அருண்மொழி என்ற இரண்டு சிங்கக் குட்டிகளின் தந்தை அல்லவா? ஆதித்தன் சேவூர்ப் போரில் வீரபாண்டியன் தலையைச் செண்டா டினான் என்று உலகம் புகழ்கிறது. அதை நினைக்கிறார். மட்டற்ற இன்பம். அவனை அரசனாக அரியணையில் அமர்த்திவிட்டுத் தாம் பக்தி நெறியில் இறங்கிவிடலாம். ஆதித்தனும் அருண்மொழியும் இப்போது தஞ்சையில் இருக்கிறார்கள். விரைவில் தஞ்சைக்குத் திரும்பி அவ் வீரனுக்கு முடிசூட்ட வேண்டும் என்று நினைக்கிறார். அவையில் ஆடல் மகளிர்கள் அவரது 'இராஜபாரம்பரியத் தை'ப் பாடி ஆடுகின்றனர்.

சுந்தரசோழர் அவரது அமைச்சர் அன்பில் அநிருத்த பிரும்மமாராயருக்கு ஒரு செப்பேடு அளித்துள்ளார். அதில் உள்ள முதல் பாடலை 'லக்ஷ்மீபர்த்துஹ~ சரண நளினதுவந்த்வம்' என்பதைத் தெய்வ வணக்கமாக்கி ஆடல் தொடங்குகிறது.

லக்ஷ்மீ பர்த்து: சரண நளின
துவந்த்வம் ஆதாரகம் வோ
திஸ்யாத் லக்ஷ்மீம் கமலநிலயா
பூததாத்ரீ கராப்ஜை:

யத் ஸம்பர்க்க த்விகுண ஜனிதாம்
காந்திம் உச்சை: ததானாம்
யத் வா சம்போ: கரஸரஸிஜேஷு
இந்து லீலாம் ததாதி

அதைத் தொடர்ந்து,

### இராஜபாரம்பரியம்

(இராகம்-தோடி)

காஞ்சிமா நகர்தனக்குக்
கவினுறவே எழுந்து
பொன்னான மாளிகையின்
பொற்கட்டின் மீமிசையில்
வானவன் மாதேவியுடன்
வண்ணமதாய மர்ந்து
வானவரின் தேவரென
விளங்கிடுவீர் கேண்மினோ!

### விஜயாலயன்

(இராகம் - பைரவி)

விஞ்சையரும் ஏத்துகின்ற
தஞ்சைநகர் கொண்டு
கஞ்சனைக் கடிந்தகரு
மாயனுக் கிளையோள்
அண்டமெலா மீன்றளித்த
அனைத்துலக அன்னை
சண்டனையும் முண்டனையும்
சாய்த்த சாமுண்டி
நிசிசரனைச் சிரம்நெறித்த
நிசும்ப சூதனியைக்

கசிந்துளம் உருகியவள்
கமலத்தாள் பற்றி
அந்நகரில் அவளுக்கோ
ராலயம் எடுத்து
அவளருளா லவனியைப்
பாலித்த மாண்பன்
மெய்யெலாம் விழுப்புண்கள்
விளங்கிய வீரன்
விஜயாலயன் என்னும்
வேந்தனையே வாழ்த்தி

ஆதித்தன்

(இராகம்-கீரவாணி)

சையமலையிற் தோன்றிச்
சலசலஎன வேயோடிக்
கடலலையில் புகுகின்ற
பூம்புகார் வரையும்
பொய்யாத பொன்னி எனப்
பூதலமே போற்றும்
காவிரியின் இருகரையும்
கற்கோயில் கண்டோன்

கோதிலாத் தேறலாம்
கூத்தருடை மன்றைக்
காதலால் பொன்வேய்ந்து
கண்டுஉள மகிழ்ந்தோன்
கோதண்ட இராமனெனத்
தன்புகழ் விரித்தோன்
இராஜகேசரிஎனப்
பெயர்பெறும் இராஜன்

காளத்தி மலையருகில்
மன்னுடலை நீத்தோன்
ஆதித்த சோழனது
ஆற்றலையும் வாழ்த்தி

### பராந்தகன்

(இராகம்-மோகனம்)

மதுரையைக் கொண்ட
கோமகன் தானாகி
ஈழம்தனை எறிந்து
தமிழ்ப்பதியும் தந்து
காகுத்தன் சேவித்த
சேதுத்துறைதனிலும்
கன்னியாம் தேவியுடை
குமரிக் கோட்டதிலும்

அரங்கத்து அம்மானின்
ஆலயம் தன்னிலும்
அன்பினால் பொன்னிட்டுத்
துலைதனிற் புகுந்தோன்
அவைகளில் குடவோலை
ஆட்சிதனை அமைத்தோன்
சவைபல கண்டசீர்
பராந்தகனை வாழ்த்தி

### இராஜாதித்தன்

(இராகம்-மல்லாரி)

தக்கோலக் கடும்போரில்
தந்தியின் மீதமர்ந்து
இரட்டரது தானையுடன்
எதிர்சமர் ஊழ்த்தி

புகழ்உடல் இவண்நிறுத்தி
விண்ணுலகு பாய்ந்த
இராஜஆதித்தன்எனும்
தேவனையும் வாழ்த்தி

**கண்டராதித்தன்**

(இராகம்-குருட்டி)

சீர்மல்கு செம்பொற்
றிருக்குன்று தன்னை
கார்மல்கு கடிசோலை
தஞ்சையர்கோக் கண்டன்
ஆதித்தன் இசைத்திட்ட
திருவிசைப்பா தன்னை
ஒதியே உளம்மகிழ்
பக்தியால் பாடி

**சுந்தரன் வாழ்த்து**

(இராகம்–மத்யமாவதி)

ஆராத அன்பாளன்
அரிஞ்சயன் அரும்புதல்வ
சீரோடு நின்புகழ்
சிறக்க என வாழ்த்துதுமே
மாதேவ னுமையோடு
மன்னியே அருள்சுரக்க
கோவே நின்கொற்றம்
நெடிதோங்க வாழ்த்துதுமே

சங்க காலத்துக்குப் பிறகு சோழ சாம்ராஜ்யத்தை மீண்டும் நிலைநிறுத்தியவன் விஜயாலய சோழன். ஆதலால் இங்கு இராஜபாரம்பரியம் அவன் முதல் தொடங்குகிறது. கி. பி. 850இல் முதன் முதலில் தஞ்சாவூ

ரைக் கைப்பற்றி அதைச் சோழர்களின் தலைநகராக் கினான். ஆதலால் 'தஞ்சை கொண்ட பரகேசரி' என்பது பட்டம். அங்கு நிசும்ப சூதனிக்குக் கோயில் எடுத்தான். அகிலலோகமாதா, சண்டன் முண்டன் என்ற இரண்டு அசுரர்களையும் வென்று இறுதியில் சும்பன் நிசும்பன் என்ற அசுரர்களைச் சம்ஹாரம் செய்தாள் அன்னை. ஆதலால் நிசும்பசூதனி என்றும் சண்டி, முண்டி, சாமுண்டி என்றெல்லாம் அழைக்கப்பட்டாள்.

விஜயாலயன் தஞ்சாவூரில் நிசும்ப சூதனியைப் பிரதிட்டைசெய்து தேவர்களாலும் வணங்கப் பட்ட அத் தேவியின் அருளால் நானிலத்தை ஆண்டான் என்று "தத: பிரதிஷ்டாப்ய நிசும்ப சூதனீம் சுராசுரைஹி அர்ச்சித பாதபங்கஜாம்" என்று சோழர் செப்பேடு கூறுகிறது. அச்செய்தியே இங்கே குறிக்கப்பட்டுள்ளது. விஜயாலயன் ஒப்பரும் வீரன். அவன் பலபோர்களை வென்று உடல் எல்லாம் தொன்னூற்றாறு விழுப்புண்கள் பெற்ற தீரன் என "மீதெல்லாம் எண் கொண்ட தொன்னூற்றின் மேலும் இரு மூன்று புண் கொண்ட வென்றிப் புரவலன்" என்று உலாக் கூறுகிறது. அந்தச் செய்தியும் இங்கு இடம் பெறுகிறது.

அவனுடைய மகன் ஆதித்தன் சஹ்யாத்ரி மலையில் தொடங்கிப் பூம்புகார் வரையும் ஓடும் காவிரியாற்றின் இருகரையும் சிவபெருமானுக்குக் கற்கோயில் கட்டினான் என்று சோழர் செப்பேடு கூறுகிறது. தில்லை அம் பலத்துக்கு அவன் பொன்வேய்ந்தான். அவனுக்கு இராஜ கேசரி என்றும் கோதண்டராமன் என்றும் பட்டப் பெயர் கள் உண்டு. அவன் காளஹஸ்த்தி மலைக்கருகில் தொண்டைமாநாடு என்ற இடத்தில் உயிர்நீத்தான். அவனுக்கு அங்கே பள்ளிப்படை (இறந்த இடத்தில் எடுக்கப்படும் கோயில்) எடுக்கப்பட்டது. அந்தச் செய்தி கள் இங்கே கூறப்படுகின்றன.

ஆதித்த சோழனின் மகன் பராந்தகசோழன். அவன் ஈழத்தையும் மதுரையையும் வென்றான். அதனால் "மதுரை கொண்ட பரகேசரி" என்று பட்டம் கொண்டான். அவன் இராமேச்சுரத்திலும், கன்யாகுமரியிலும், ஸ்ரீரங்கத்திலும் துலாபாரம் செய்து (தன் எடைக்குச் சம மான எடைபொன் கொடுத்தல்)பொன் கொடுத்துப் பூஜித்தான் என்று அண்மையில் கிடைத்த வேலஞ்சேரி செப்பேடு கூறுகிறது. அவன் காலத்தில்தான் உத்தரமேரூர் ஊராட்சியைக் குறிக்கும் குடவோலைக் கல்வெட்டு எழுதப்பட்டது. "சவை" என்றால் புலவர்களின் சபை எனப் பொருள். அவனுக்குப் புலவர்பால் சிறந்த ஈடுபாடு உண்டு. அச்செய்திகள் இங்கு இடம் பெற்றுள்ளன.

பராந்தகனின் மகன் இராஜாதித்தன், இராஷ்டிர கூடர்களுடன் நடந்த போரில் யானை மீதமர்ந்து போரிட்டான். அந்தப் போரில் மாற்றான் அமபு மார்பில் தைத்து மாண்டான். ஆதலால் 'விண்ணில் பாய்ந்தான்' வீரப்புகழ் கொண்டான் என்ப. இராஜாதித்தனுக்குப் பிறகு பராந்தகனின் இரண்டாவது மகன் கண்டராதித்தர் ஆண்டார். அவர் சிவஞானச் செம்மலாகத் திகழ்ந்து தில்லைக்கூத்தர் மீது திருவிசைப்பா இயற்றியுள்ளார். அந்தப் பாடல்களில் உள்ள சொற்கள் இங்கு இடம் பெறுகின்றன. அவருக்கும் அடுத்து அவர் தம்பி அரிஞ்சய சோழர் ஆண்டார். அரிஞ்சய சோழரின் மகனே சுந்தரசோழர். அவரது அவைக்களத்தில் ஆடும்மகளிர் அவரது முன்னோர்களின் சிறப்புக்களை வாழ்த்தி சுந்தரரையும் வாழ்த்தி ஆடுகின்றனர்.

சோழர் காலத்தில் இருந்த பண்பு வேறு. அதற்கும் எழுநூறு எண்ணூறு ஆண்டுகளுக்கும் பிறகு ஆண்ட நாயக்கர், மராட்டிய அரசர்களின் காலத்து அரச அவையில் ஆடுகின்ற பெண்கள் அரசனையே தலைவனாக்கி, காமச் சுவை ததும்பச் சிற்றின்பத்துக்கு அழைப்பாளாக

பல 'வர்ணங்களைப்' பாடி ஆடினர். 'மூவரையன் வண்ணம்' போன்ற பாடல்கள் இதற்கு எடுத்துக்காட்டு. ஆதலால் தற்காலம் வரை 'வண்ணங்களும்' 'பதங்களும்' காமச் சுவை மிக விளங்கின. ஆனால் சோழர்காலத்துச் சமுதாயம் உன்னதப் பண்பும் கலையும் மிக்கதாகத் திகழ்ந்தது. ஆதலின் 'ராஜபாரம்பரியம்' பாடி அவையில் ஆடினாரென்க.

இந்தப் பாடலின் தொடக்கத்தில் சுந்தரசோழரும் வானவன் மாதேவியும் பொன்மாளிகையில் அமர்ந் திருந்தது 'வானவரின் தேவரென' விளங்கியது. இந்திர னும் இந்திராணியும் அமர்ந்துள்ளது போல் விளங் கிற்றாம். இது முதல் பொருள். இங்கே பொன்மாளிகை யில் நடக்கவிருக்கும் செயலால் சுந்தரசோழர் உயிரிழக்கப் போகிறார். அவருடன் வானவன் மாதேவியும் உடன் இறக்கப் போகிறாள். அவ்வாறு இறப்பவர்கள் வீரசுவர்க் கம் எய்துவர் என்பதும், இருவரும் தெய்வமாய் அமர்ந்து விளங்குவர் என்பதும் நம் முன்னோரின் நம்பிக்கை. பின்னர் நடக்கவிருப்பதை இந்தப் பாடல் முன்னதாகவே மறைமுகமாகத் தொனிக்கிறது.

(இராகம்-நாதநாமக்கிரியை)
சோழர்தம் குலமே என்றும்
செவியுறாச் செயல் ஒன்றின்று
சூழ்ச்சியால் விளைந்த தன்றே
சொல்லவும் போமோ தேவ
செழியனின் சிரத்தைப் போரில்
செண்டென அடித்த சிங்கம்
வழுதிதன் வஞ்சர் வாளில்
வீழ்ந்துடல் சிதைந்த தந்தோ

சுந்தரசோழரை வாழ்த்தி ஆடிய பெண்கள் "இந்திரன் ஏறக் கரியளித்தார், பரியேழளித்தார், சுந்தர

சோழரை யாவரொப்பார் இத்தொன்னிலத்தே" என்ற (வீரசோழியத்தில் வரும்) பாடலையும் பாடி ஆடு கின்றனர். அவ்வமயம் காவலன் நெஞ்சமும் உள்ளமும் பதைபதைக்க ஓடி வருகிறான். நாக்குழறுகிறது. சுந்தரரின் அருமைப் புதல்வன் ஆதித்த கரிகாலனைப் பாண்டியர்களின் கையாட்கள் வஞ்சனையால் கொன்று விட்டனர் என்கிறான்.

இச்செய்தியைக் கேட்ட சுந்தரர் பேரிடி வீழ்ந்ததென மூர்ச்சிக்கிறார். கண் திறக்கிறார். உடல் பதறுகிறது. கால் தடுமாறுகிறது. ஆதித்தகரிகாலனின் மறைவு அவரை உலுக்கி விட்டது; புலம்புகிறார். (ஆதித்தன் இறந்ததால் சுந்தர சோழர் மனமுடைந்து பொன்மாளி கையில் இறந்துவிடுகிறார் என்பது வரலாறு. ஆதலால் பொன்மாளிகைத் துஞ்சியதேவர் என அவருக்குப் பெயர். அவருடன் வானவன் மாதேவியும் உடன் இறந்து விடுகிறாள்.)

## சுந்தரசோழர் வருத்தம்

(இராகம்-முகாரி)

பல்லவி

எங்கு மறைந்தனை
    என்னருமை மைந்த
யாங்கன் இயம்புவேன்
    எந்தன் உயிர்துடிப்பை

—எங்கு மறைந்தனை

சரணம்

தஞ்சை அரியணையில்
    தகவுடனே அமர்ந்து
தனியரசு புரிவாய் என்று
    நினைத்திருந்தேன்

பஞ்சமா பாதகர்கள்
வஞ்சனையில் வீழ்ந்து
துஞ்சிடுவாய் எனத்துளியும்
நினைந்திலனே

—எங்கு மறைந்தனை

ஆதித்த கரிகால
அந்தோ மறைந்தனையே
பாதகக் கூற்றத்தின்
பாசத்தில் பட்டனையே
சோதி சுடருருவில்
தோன்ற நினைந்தனையோ
சுரருலகும் ஆள
விரைந்தனையோ மைந்த

—எங்கு மறைந்தனை

என்று கதறிய சுந்தரசோழர் இறந்துவிடுகிறார். அவருடன் வானவன் மாதேவியாரும் உயிர் நீத்துவிடுகிறார்.

(இராகம்-பூபாளம்)

தன்கொழுநன் உயிர்விடலும்
தளிர்க்கரத்தால் தாங்கி
தரைமகளும் சுரமகளும்
அணைவதன் முன் தான்அணைந்து
இன்னுயிரை உடன்நீத்து
இறைமகளாய் எழுந்தாளை
வானவன் மாதேவியினை
வாயார வாழ்த்துதுமே.

(இரண்டாம் அங்கம் முற்றும்)

# 3 உத்தம சோழர்

தஞ்சை நகரில் வீதியில் ஒருவன் பாடி ஆடும் பாடல்

## ஆனந்தக் களிப்பு

1 ஆட்சி வருகுது ஆட்சி வருகுது
ஆட்சி வருகுதைய்யே
ஆட்சி வருகுது ஆட்சி வருகுது
அருண்மொழி ஆட்சிஅய்யே

2 துன்பமே இன்றி இன்பம் நிறைந்திட
தோன்றிடும் ஆட்சி அய்யே
அன்புடனே மக்கள் ஆனந்தமாய் வாழ
மலர்ந்திடும் ஆட்சி அய்யே

3 பண்புடையோ ரெல்லாம் பயமின்றி இருந்திடும்
மாண்புடை ஆட்சி அய்யே
விண்ணவரெல்லாம்
வியந்திடும் வண்ணம்
விரிந்திடும் ஆட்சி அய்யே

4 கற்றவர் தம்மைப் போற்றிக் களித்திடும்
வித்தக ஆட்சி அய்யே
செற்றவர் தம்மை செருவினில் வீழ்த்திடும்
சீரிய ஆட்சி அய்யே

5 பாடல்கள் எங்கும் பண்புடன் இசைத்திட
நாடிடும ஆட்சி அய்யே
ஆலயமெங்கும ஆடல் மலிந்திட
கூடிய ஆட்சி அய்யே

6 பக்தியுடன் மக்கள் பரமனைப் பரவிடும்
பாங்குள்ள ஆட்சி அய்யே
உத்தியுடன் நாட்டை உண்மையாய் ஆண்டிடும்
உன்னத ஆட்சி அய்யே

7 செல்வமும் கல்வியும் சேர்ந்து வளர்ந்திட
தேர்ந்திடும் ஆட்சி அய்யே
நல்லவர் எல்லோரும் போற்றிப் புகழ்ந்திடும்
துல்லிய ஆட்சி அய்யே

—ஆட்சி வருகுது

தஞ்சை மாநகர் தத்தளிக்கிறது. காஞ்சிபுரத்துப் பொன் மாளிகையில் மன்னர் சுந்தர சோழர் இறந்துவிட்டார் என்ற செய்தியும், அவருடன் வானவன் மாதேவியாரும் மறைந்து விட்டார் என்ற செய்தியும் மக்களைத் துயரக் கடலில் ஆழ்த்துகின்றன. அருண்மொழி. தன் அண்ணனையும், தந்தையையும் அருமைத்தாயையும் அடுத்தடுத்து இழந்து ஆராத் துயரில் வருந்துகிறான். வஞ்சனையாளர் செயலால் நாடு கலக்கமுற்றிருக்கிறது. ஆன்றோர்கள் கூடி அருண்மொழிவர்மனை உடனடியாக அரசனாக முடிசூட்ட முடிவெடுக்கிறார்கள். அப்படிச் செய்தால் கலக்கத்திலிருந்தும் குழப்பத்திலிருந்தும் நாடு விடுபட்டு விடும் என்று மக்கள் நம்புகிறார்கள். அருண்மொழி ஆட்சியை மேற்கொள்ளப் போகிறான் என்ற செய்தி நாடு முழுவதும் பரவுகிறது. அருண்மொழியின் திறன் மக்களுக்குத் தெரியும். ஆதலால் நல்ல ஆட்சி மலரப் போகிறது என்று மக்கள் மகிழ்கின்றனர். தஞ்சை நகரில் தெருவில் மக்களின் நிலையும் ஒருவன் பாடி ஆடி வருவதும் இதைப் பிரதிபலிக்கிறது.

(இராகம்-ரீதிகௌளை)

**பல்லவி**

மகுடம் புனையும்
தருணம் இது
மாந்தர் அனைவரும்
வேண்டுவதும் ஈதே

—மகுடம் புனையும்

**அனுபல்லவி**

முன்னவரும் மறைந்தார்
மன்னவரும் இறந்தார்
கொற்றமும் கோவின்றி
நிற்றலும் நீதிஅன்று

—மகுடம் புனையும்

**சரணம்**

ஆழியும் சங்கமும் நின்
அங்கையில் காணுகின்றோம்
ஆற்றலும் அன்பும் நின்
தோற்றத்தில் காணுகின்றோம்
வீரமும் ஈகையும் நின்
பார்வையில் காணுகின்றோம்
மாரனும் நாணுகின்ற
பேரெழில் காணுகின்றோம்

—மகுடம் புனையும்

சடையன் கொடுத்திட
வசிட்டன் புனைந்தமுடி
வாசவனும் விரும்பும்
வளவர் அணிந்த முடி

தேசமெல்லாம்
ஒளிவீசுகின்ற முடி
தேவாதி தேவனும்
அருள்சுரக்கும் முடி

—மகுடம் புனையும்

அமைச்சர்களில் மூத்தவரும் எல்லாராலும் வணங்கப் பெறுபவருமான அநிருத்த பிரும்ம மாராயர் அருண்மொழியை அணுகி மக்களின் விருப்பத்தை எடுத்துரைக்கிறார்.

அருண்மொழி பிறந்தபொழுதிருந்தே அழகு மிகுந்தவனாக இருந்தான என்றும், பெரும் சக்கரவர்த்தியாகத் திகழப் போகும் சின்னங்களான சங்கமும் சக்கரமும் அவன் கையில் திகழ்ந்தன என்றும் சோழர் செப்பேடுகள் கூறுகின்றன. அந்தக் கருத்தே இங்கே இடம் பெறுகிறது.

சோழமன்னர்கள் தங்கள் பாரம்பர்யத்தைக் கூறும் போது ராமபிரானின் குலத்து உதித்தவர்கள் என்று தங்களைக் கூறிக் கொள்வர். கவிச்சக்கரவர்த்தி தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளலின் மரபுளோரர் கொடுக்க வசிட்டர் இராகவனுக்கு முடிபுனைந்ததாகக் கூறுவான்

கம்பன், இராஜராஜனுக்கும் முன்னர் 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். ஆதலின் அக்காலத்தில் அரியணை ஏறிய சோழரது முடிசூடும் விழாவில் சடையன் பங்கேற்றார் என்பதும், சோழருக்கு முடிசூட்டிவைக்கும் ராஜகுரு, வசிட்டராக உருவகிக்கப்படுதல் மரபு என்பதும் இங்கே குறிப்பு. புவிச்சக்கரவர்த்தியின் பட்டாபிஷேக விழாவில் கவிச் சக்கரவர்த்தியை நினைவு கூர,

சடையன் கொடுத்திட
வசிட்டன் புனைந்தமுடி

என்ற அடி. அதை அநிருத்த பிரும்ம மாராயர் வாயி லாகக் காண்கிறோம். சோழப் பேரரசனாக அருண் மொழி முடிசூடவேண்டும் என மக்கள் வேண்ட, அவன் எடுத்த முடிவு!

(இராகம்-சாமா)

பல்லவி

உத்தம சோழரே
முடிசூடுவார்
அத்தனுக் கினையவர்
ஆதலின் யாம் மகிழ
—உத்தம சோழரே

சரணம்

சிவஞானச் செம்மலான
கண்டரா தித்தருக்கும்
செம்பியன் மாதேவியான
அன்புரு அன்னைக்கும்
செல்வக் குழந்தையாகிச்
சீருடனே வளர்ந்து
சென்னியர் முடிபுனைய
முற்றும் முறைமை பெற்ற
— உத்தம சோழரே

உத்தம சோழர், அருண்மொழிக்கு ஒன்றுவிட்ட தந்தை; செம்பியன் மாதேவியாருக்கும் கண்டராதித்த சோழருக்கும் பிறந்தவர். கண்டராதித்தர் மேற்குத் திசையில் (திருக்கோவிலூருக்கு அருகில் ஐம்பை என்ற ஊருக்கு அருகில்) சென்றபோது இறந்து விடுகிறார். ஆதலால் அவருக்கு ‘மேற்கெழுந்தருளிய தேவர்’ என்று பெயர். அப்பொழுது உத்தமசோழர் கைக்குழந்தையாக

இருந்திருக்க வேண்டும். ஆதலின் கண்டராதித்தருக்குப் பிறகு அவர் தம்பி அரிஞ்சயசோழர் அரியணை ஏறினார். அவருக்குப் பின்னர் அவர் மகன் சுந்தர சோழர் முடிசூடினார்.

சுந்தரர் இறந்ததும் அருண்மொழியைத் தேடி அரியணை வருகிறது. அருண்மொழி யோசிக்கிறான். உத்தம சோழரும் அரியணைக்கு உரியவரல்லவா? ஆளுவது மட்டுந்தானா குறிக்கோள்? உன்னத மனிதனாக, பண்பாளனாக வாழ்வதல்லவா குறிக்கோள் என்று நினைக்கிறான்.

தெய்வ வழிபாட்டில் தென்னகமெங்கும் திருத்தலங்களுக்குச் சென்று சிவாலயங்களைப் புதுப்பித்துப் பொருள்களையும் பொன்னையும் அளித்து உயர் வாழ்வு வாழும் செம்பியன் மாதேவியாரை நினைக்கிறான். தன் அக்கா குந்தவைப்பிராட்டி தனக்குப் போதித்த சீலங்களை நினைக்கிறான்.

'தியாகம் ஒன்றே அழியாத அமுதநிலைக்கு வழி' என்ற ''தியாகேன ஏகேன அமிர்தத்துவம் ஆனஸூஹு'' என்ற உபநிடத வாக்கியங்களை நினைக்கிறான். ஆதலின் பெரியவர், சிறியதாதைக்கு நிகரான உத்தம சோழரே முடிசூடவேண்டும என்று முடிவெடுக்கிறான். தனக்கு வந்த பேரரசை, தியாகம் செய்த தியாகச் செம்மலாகத் திகழ்கிறான் அருண்மொழி. அம்மொழி கேட்ட மதுராந்தக உத்தமசோழர் அருண்மொழியை இறுக அணைத்துக் கொள்கிறார். அவனது பண்பு அவரது கண்களில் ஆனந்த பாஷ்பமாகப் பெருகிறது.

என்றவன் இயம்பலோடும்
எய்தினன் எய்தியே எதிரில்
நின்ற இளவலை இறுக மார்பில்
புல்லினன் நயனம் மல்க

துன்றிய கொற்றம் தன்னை
தூசென துறந்த தியாகக்
குன்றமே என்று கழறினன்
உத்தமத் தூயவனே

அருண்மொழியை முடிசூட மக்கள் வேண்ட அவன் உத்தமசோழரே முடிசூடட்டும் என்று கூறியதாகச் சோழர் செப்பேடுகள் கூறுகின்றன.

உத்தமர் முடிசூடிக் கொள்கிறார். உடனே அருண் மொழியே தனக்குப் பின்னர் அரசனாக வேண்டும் என்று தீர்மானித்து அவனை இளவரசனாக அமர்த்துகிறார்.

(மூன்றாம் அங்கம் முற்றும்)

# 4 அருண்மொழியின் திருமணம்

மதுராந்தக உத்தமசோழர் அருண்மொழிவர்மனுக்குத் திருமணம் செய்து வைக்கிறார். "தந்தி சக்தி விடங்கி" என்ற இயற்பெயரும் "லோக மகா தேவி" என்ற பட்டப் பெயரும் உள்ள பெண்ணை அருண்மொழி மணக்கிறான். திருமண விழா மரபு வழிப்படி பெரும்பாலும் நாட்டிய முத்திரைகளால் நடித்துக் காட்டப்படும். மங்கல வாழ்த்தொலிகள், அம்மி மிதித்தல், அருந்ததி காணல் முதலிய இதில் இடம் பெறும். நாதசுர இசை இங்கு இசைக்கப்படும். அருண்மொழியின் கல்யாண வைபவத்தில் ஊஞ்சல் பாட்டு.

ஊஞ்சல்

(இராகம்-குறிஞ்சி)

1 தந்தி சக்தி விடங்கி எனும்
வஞ்சி இளங்கொடியே
அந்தமிலா பந்தமுடன்
அருண்மொழியிற் படர்ந்து —ஆடுஊஞ்சல்

2 லோக மாதேவி
உந்தன் தேகசுகம் வேண்டி
மோக மிகவே அணைந்து
போகமது துய்த்திட — ஆடுஊஞ்சல்

3 கரதலத்தின் மென்மையினால்
அருண்மொழியின் புஜத்தை
அருளுடைய தாக்கியே
ஆட்சி செலுத்திட — ஆடுஊஞ்சல்

சோழரது கல்வெட்டுக்களில் மெய்க்கீர்த்தி என்ற பகுதி உண்டு. அவற்றில் அரசன் தன்தேவி அருகில் அமர்ந்து விளங்குவதால் அருளாட்சி புரிந்தான் என்று கூறும் பகுதிகள் பல உள்ளன. அது இங்கே குறிக்கபபடு கிறது.

மங்களப்பாடல்

(இராகம்-குறிஞ்சி)

1 சோழகுலதீபனுக்கு
சுந்தரகுமாரனுக்கு
நித்தியவிநோதனுக்கு
நாண் மங்களம்

2 திருமகளின் தேவனுக்கு
நிலமகளின் நாதனுக்கு
கலைமகளின் கேள்வனுக்கு
நாண் மங்களம்

3 பொன்னியின் புதல்வனுக்குக்
கன்னியைப் புணர்ந்தவற்குச்
சென்னிகுலச் செல்வனுக்கு
நாண் மங்களம்

4 தந்திசக்தி விடங்கி யுடை
தளிர்க்கரத்தைத் தரித்தவற்கு
சந்தத் தமிழ் கண்டவற்கு
நாண் மங்களம்

— சோழ குலதீபனுக்கு

பெண்ணை மணக்க விரதம் மேற்கொண்டு கரத்திலே மங்கல நாண் தரித்துத் திருமணம் புரிவது மரபு. அம் மங்கல விழாவில் 'ஆரத்தி' எடுத்தலும் மரபு. அதற்குரிய பாடல் இது.

**(நான்காம் அங்கம் முற்றும்)**

# 5 இராஜராஜன் முடிசூடல்

*யாண்டு ஓர் பதினைந்து*
*ஆண்டு முடிந்திடவே*
*மாமன்னர் உத்தமத்*
*தேவரும் உயிர்விடவே*
*பெரியோரும் அருள்மொழியை*
*அரியணையில மர்த்தி*
*சிரீ ராஜராஜனெனச்*
*செங்கோலும் அளித்தனரே*

*உத்தமச்சோழர் கி.பி.970 முதல் 985 வரை பதினைந்து ஆண்டுகள் ஆண்டு மறைந்தார். அவர் இறந்ததும், அருண்மொழிவர்மன் 985இல் அரியணை ஏறினான். அப்போது இராஜகேஸரி வர்மரான இராஜராஜ சோழ தேவர் என்று பட்டாபிஷேகப் பெயர் சூடினான். அவன் முடிசூடிய விழா ஒப்பற்ற விழாவாக, உலகமே போற்றும் விழாவாக அமைந்தது. அந்தக் கோலாகல விழாவைச் சொல்லால் வடிக்க ஒண்ணாது. ஆதலின் நாட்டியமாகவே ஆடப்பெறும். வாத்ய கோஷங்கள் முழங்க, மறையவர் வேத ஒலி முழங்க, மரபுளோர் அரியணை தாங்க, மாற்றரசர் அடி வணங்க, முறைப்படி அரியணை ஏறியதும் கொற்றக்குடை கொடுத்தல். சாமரை வீசல், அபிஷேக மங்கள நீராடல், அரியணை ஏறல், உடைவாள்பெறல், பட்டம் கட்டிக் கொள்ளுதல், மகுடம் சூடிக்கொள்ளல் முதலிய ஆடல்கள் இதில் இடம் பெறுகின்றன.*

(இராகம்-சாவேரி)

**பல்லவி**

மகாபிஷேகம் செய்து மகிழ்ந்தனரே
அருண்மொழிக்கு —மகாபிஷேகம்

**சரணம்**

இராஜராஜன் எனத் திருவுடைட் பெயரளித்து
இராஜ கேஸரி எனப் பெரும் பெயருமளித்து
லோகமாதேவியரை உடன் அணையில் இருத்தி
மாதேவர் அருளினால் மணி முடியும் புனைந்து
—மகாபிஷேகம்

மந்திர மறை உரைக்க மங்கள ஒலி இசைக்க
தந்திரச் சுற்றம் சூழ மும்முரசம் முழங்க
சந்திரனை நிகர்க்கும் சுந்தரக் குடைஎடுத்து
சக்கர வர்த்திஎன சகம்முழுதும் துதிக்க
—மகாபிஷேகம்

விண்ணோர் தலைவன் என விழுநீர் முடியிலாட்டி
வெண்சா மரையுடன் உடை வாளும் அளித்து
மின்னார் மணிதுலங்கும் வீரபட்டமும் சூட்டி
தன்னேர் இல்லாத தரைபதி இவன் என்ன
—மகாபிஷேகம்

மாமன்னனாக முடிசூடும் விழாவை 'மகாபிஷேகம்' என்று செப்பேடுகள் கூறுகின்றன. ஆதலின் பட்டாபிஷேக விழாவை மகாபிஷேகம் என்று அழைத்துள்ளோம். முடிசூடும் போது அரசனுக்குப் பட்டப் பெயர் அளிப்பது மரபு. அருண்மொழிக்கு முடிசூட்டிய போது 'இராஜராஜன்' என்ற பட்டப் பெயர் சூட்டினர். ஆதலின் இது வரை அருண்மொழி என்று அழைக்கப்பெற்றவன் இனி இராஜராஜன் என்று அழைக்கப்படுகிறான். விஜயாலயன்

காலத்திலிருந்து முடிசூடிய சோழர்கள் 'பரகேசரி' என்று ஒருவரும் அடுத்து வந்தவர் 'இராஜகேஸரி' என்றும் பட்டப் பெயரை மாற்றி மாற்றி ஏற்றுக்கொண்டனர். நம் இராஜராஜ சோழன் இராஜகேஸரி என்று பட்டம் பூண்டான். அவன் அரியணையில அமர்ந்தபோது அவனது தலைமைத் தேவி லோகமகாதேவியும் உடன் அமர்ந்து முடி சூட்டப்பட்டாள். அவளே அவனது 'பட்டமகிஷி' ஆனாள். சிறந்த சிவபக்தன் ஆதலின் மகாதேவர் அருளோடு மணிமுடி தரிததான் என்றது. இவ்விழாவில் அரசனுக்கு வெண்கொற்றக்குடை, வெண்சாமரை, உடைவாள், வீரப்பட்டம் முதலியவை அளிக்கப்படும். மங்கள இசை ஒலிக்க, மறை முழங்க புண்ணிய நீர் அவன் முடிமீது ஆட்டப்பெறும். அவற்றை இப்பாடல் குறிக்கிறது. அவ்வமயம் இவனது சிறப்புகள் பாடப்படுகின்றன.

> "அயம் அகில கலா கலாப பாரவார பாரதிருச்வா
> அசேஷ் நிருப சக்ர சாரு சாமீகர கிரீட கோடி கடித
> அனேக மாணிக்ய மரீசிபுஞ்ச பிஞ்சரீ கிருத பாதபீட
> ராஜராஜ : ராஜகேஸரிவர்மா"

இவன் அனைத்துக் கலைகளையும் கரைகண்டவன்; இவனது பாதத்தை ஏராளமான பிற அரசர்கள் வந்து வணங்குகிறார்கள்; அவர்களது மகுடங்களில் உள்ள மாணிக்கங்கள் இவனது பாதத்தில் பளிச்சிடுகின்றன என்பது கருத்து. சமஸ்கிருதத்தில் உள்ள இவ்வரிகள் இராஜராஜனின் அருமை மகன் இராஜேந்திர சோழன் வெளியிட்ட திருவாலங்காட்டுச் செப்பேட்டில் உள்ளன. தனது மைந்தனால் இவ்வாறு இராஜராஜன் புகழப்பட்டுள்ளான்.

இவ்வரும் விழாவில் ஆன்றோர்கள் ஆசீர்வதித்து அறிவுரை வழங்குகின்றனர். அறிவுரையாக இங்கு இரண்டு பாடல்களைக் கொள்கிறோம். இரண்டும் கம்ப

னது இராம காப்பியத்திலிருந்து எடுக்கப்பட்ட மேற்கோள்கள். இவ்விரு பாடல்களும் இராமபிரான் அருளியவையாக வருகின்றன. வாலிக்கு மோக்ஷம் அளித்து, சுக்ரீவனுக்கு அரசை அளித்து அவன் முடிசூடப் போகும் போது எம்பிரான் கூறியவை:

*வாய்மைசால் அறிவின் வாய்த்த*
*மந்திர மாந்தரோடும்*
*தீமை தீர் ஒழுக்கின் வந்த*
*திறத்தொழில் மறவரோடும்*
*தூய்மை சால் புணர்ச்சி பேணி*
*துகள் அறு தொழிலை ஆகி*
*சேய்மையோடு அணிமை இன்றி*
*தேவரின் தெரிய நிற்றி*

*நாயகன் அல்லன் நம்மை*
*நனி பயந்து எடுத்து நல்கும்*
*தாய் என இனிது பேணி*
*தாங்குதி தாங்குவாரை*
*ஆயது தன்மை யேனும்*
*அறவரம்பு இகவா வண்ணம்*
*தீயன வந்த போது*
*சுடுதியால் தீமையோரை*

வாய்மையும் அறிவும் மிக்க அமைச்சர்களுடனும் தீமை அற்ற ஒழுக்கமுடைய வீரர்களுடனும் இணைந்து குற்ற மற்ற ஆட்சி புரிவாயாக. பிறர் சொல் கேட்டு நமக்கு நெருங்கியவர் இவர்; வேண்டாதவர் இவர் என ஆட்சி செய்வோர் பிரிக்காது, தேவர்களிலும் சிறந்தவராக ஆட்சிபுரிதல் வேண்டும். இவன் நம்மை ஆள்பவன் என்ற எண்ணம் வராமல் மக்கள், நம்மை பயந்து காக்கும்

தாய்க்கு நிகரானவன் என அன்போடு நேசிக்கும் வண்ணம் ஆட்சி செய்வாய். இதுவே உகந்த தன்மை. ஆனால் தீயன வந்தபோது தீயைப்போல் சுடுவாயாக என இராஜ ராஜனுக்கு அறிவுரை வழங்கப்படுகிறது. இராஜராஜனது ஆட்சியை நன்கு ஆராய்ந்த வரலாற்று ஆசிரியர்கள் அவன் இவ்விரு பாடல்களுக்கும் இலக்கணம் போல் திகழ்ந்தான் என்று அறிவர். அவனது ஆட்சி மக்களுக்கு மடடிலா மகிழ்ச்சியை அளித்தது. அவனைத் தாய்க்குச் சமமாகவே எண்ணி இன்புற்றனர். அதே சமயம் தீமையைக் கண் டிக்கவும் அவன் தவறவில்லை. ஆதலின் கம்பனது இவ்விரு பாடல்களை மேற்கொண்டோம்.

(ஐந்தாம் அங்கம் முற்றும்)

# 6 வெற்றிகள்

இராஜராஜன் முடிசூடும் போது அனைத்து அரசர்களுக்கும் தூதுவரை அனுப்பி நட்புக்கரம் நீட்டினான் ஆனால் சேரமன்னன் இராஜராஜன் அனுப்பிய தூதுவனை இகழ்ந்தான். சேரனும் பாண்டியனும் அப்பொழுது நட்புடன் திகழ்ந்தனர். ஆதலால் புதிதாக முடிசூடும் இராஜராஜனின் ஆற்றல் அறியாது இகழ்ந்தனர். அச்செய்தியை தூதன் வந்து உரைக்கிறான்.

ஓர்ந்து இணைந்திட விரும்பலன் உதியர்கோன்
பூழியன் உடன் போந்த பெற்றியால்; தேர்ந்துமே
நேரியர் திறல் நினைத்திலன் நெடும் பாழியில்
வீழவே தூற்றினன் தூதினை என்ற சொல்
கேட்டதால்

சேரமன்னன் உதியர்கோன் என்றும் உதகைவேந்து என்றும் அழைக்கப்பட்டான். பூழியன் என்பது பாண்டியன். நேரியர் என்பவர் சோழர். பாழி எனில் போர் எனும் பொருள். இராஜராஜன் பட்டத்துக்கு வந்ததும், தனது தூதனை சேரன் இகழ்ந்ததால் ஒரே பகலில பதினெட்டு சுரங்களைக் கடந்து உதகையை வென்றான் என்று உலாக்கள் கூறுகின்றன. "தூதற்காப் பண்டு பகல் ஒன்றில் ஈரொன்பது சுரமும் கொண்டு மலைநாடு கொண்டோன்" என்கிறது உலா.

இராஜராஜன் சீற்றம் மிக தனது சேனைத் தலைவனாகிய கிருஷ்ணன் இராமனுக்கு ஆணையிடுகிறான்:

**பல்லவி**

படை செலுத்துக பகை எனும் சொலே
இலை எனும் வகை படை செலுத்துக.

**சரணம்**

1 வடதிசை தனில் குடை பெயர்கவே
கொடியர் வீழ்ந்திட வாள் பெயர்கவே
இடி நிகர்த்திடும் முரசதிர்கவே
புலி பொறித்த நம் கொடி பறக்கவே
— படைசெலுத்துக

2 ஒளியினிற் கடுகிடும் தேர் செலுத்தியே
வளியின் மீமிசை பரி செலுத்தியே
தலைகளை இடறிடக் கரி செலுத்தியே
அலைகளின் மிசை கலன் செலுத்தியே
— படைசெலுத்துக

3 மலை நடுங்கியே மாமடுவாகிட
அலை எழுந்துமே உயர் கிரியுமாகிட
நிலமதிர்ந்துமே நடுநடுங்கிட
திசை தொறும் ஒலி கிடுகிடுத்திட
— படைசெலுத்துக

4 உதகை வேந்தும் கடலினில் புகுந்திட
மதுரை வேந்தும் மலையினில் ஒளிந்திட
இலங்கை வேந்தும் இருளினில் மறைந்திட
வேங்கி வேந்தும் விழுந்தடி பணிந்திட
— படைசெலுத்துக

5 சேரன் நாட்டினை செந்தழல் தழுவிட
செழியன் நாட்டினை கழுதையும் உழுதிட
சளுக்கர் நாடுமே துகள் துகளாகிட
நுளம்பர் பாடியும் நொடியினில் நொறுங்கிட
— படைசெலுத்துக

அவன் ஆணையிட்டது தான் தாமதம். அவனது சேனை மாற்றரசுகளைக் களத்தில் அடி பணியவைத்தது. அப்பணியைச் செய்து முடித்த பெருமை அவனது சேனாபதி கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரும்மமாராயன் என்பவனையும், சூரவன் உலகளந்தானான ராஜ ராஜ மகாராஜன் என்பவனையும் சாரும். இவர்களுடன் வில்லவன் மூவேந்த வேளான், ராஜகேசரி மூவேந்த வேளான், தென்னவன் மூவேந்த வேளான், நித்தவினோத விழுப்பரையன், ராஜராஜ வாணகோவரையன் முதலியோர் இப்போர்களில் பங்குபெற்றனர். இராஜராஜன் பெற்ற வெற்றிகளில் முதலிடம பெறுவது காந்தளூர் சாலை என்ற இடத்தது ஆகும். "காந்தளூர் சாலை கல மறுத்த" என்று அவன் பெயர் ஏறறான். அவனது மெய்க்கீர்த்திகள் அவன் அடைந்த வெற்றிகளைத் தொகுத்துக் கூறுகின்றன. அம்மெய்க்கீர்த்தியை அடிப்படையாகக் கொண்டு பின்வரும் பாடல் இயற்றப்பட்டுள்ளது. இராஜ ராஜனது வீரத்தைக் குறிக்கும் பகுதி இது. அரசன் ஆணைப்படி அனைத்து நாடுகளும் கைப்பற்றப்பட்டன என சேனாபதி கிருஷ்ணன் இராமன் வந்து சொல்வதாக இப்பாடல் அமைகிறது.

(இராகம்-இந்தோளம்)

திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
தனக்கே உரிமை பூண்டிடும் தேவ
கணத்தினில் அறுந்தது காந்தளூர்ச்சாலை
கங்க பாடியும் தடிகைப் பாடியும்
குடமலை நாடும் கொல்லமும கலிங்கமும்
எண்டிசைப் புகழ்தர ஈழமண்டலமும்
இரட்டப்பாடி ஏழரை இலக்கமும
திண் திறல் வென்றித தண்டாற கொண்டு
இன்றே உந்தம் அடியினில் வீழ்த்தினம்
என்றனன் இராமனாம் சேனைத் தலைவனும்
நன்று நன்றென நவின்றனன் நாதனே.

(இராகம்-இந்தோளம்)

ஆசைலாத் ஹிமாம்சு ஜன்ம மஹிமாத்
ஆதக்ஷிணாம்போ நிதே:
ஆசாஸ்தாஹ்வய பர்வதாத் கிரிபதே:
ஆசம்புனாதிஷ் டிதாத்
ராஜானோ நிஜவம்ச ரக்ஷண பரா:
போக்தும் ச போகான் பஹூன்
நீத்யா நித்யவிநீத பாதகமல
துவந்த்வம் சமாசிஸ்ரியன்

மாற்று அரசர்கள் எல்லாரும் இராஜராஜனது அடிபணிந்ததை இராஜேந்திர சோழன் அளித்த திருவாலங்காட்டு செப்பேடுகள் மேற்கண்டவாறு கூறுகின்றன. அப்பாடல் செப்பேட்டில் சமஸ்கிருத மொழியில் உள்ளது. அதை அப்படியே எடுத்து இங்கு வழங்குகின்றோம்.

இமயத்தை நிகர்க்கும் ஸ்ரீசைல மலையிலிருந்து தெற்குக் கடல்வரையும், அஸ்தகிரி மலையிலிருந்து சம்புவினால் தோற்றுவிக்கப்பட்ட மலை வரையிலும் (நான்கு எல்லைக்கு உட்பட்ட) உள்ள அரசர்கள் தங்களது வம்சங்களைக் காத்துக் கொள்ளவும் சுகங்களை அனுபவிக்கவும் வேண்டி நித்யவிநீதனாகிய இராஜராஜனது பாத கமலங்களைச் சரண் அடைந்தார்கள் என்பது கருத்து.

(ஆறாவது அங்கம் முற்றும்)

# 7 திருமுறை காணல்

இராஜராஜனது வாழ்க்கையில் மூவர் பாடிய தேவாரப் பதிகங்களை நம்பியாண்டார் நம்பியின் உதவி யுடன் கண்டுபிடித்தது மிகவும் சிறந்த நிகழ்ச்சி என வரலாற்று ஆசிரியர் கூறுவர். கி.பி. 1300இல் வாழ்ந்த உமாபதி சிவாசாரியார் திருமுறைகண்ட புராணம் என இயற்றியுள்ளார். அதன் அடிப்படையில் இப்பகுதியை அமைத்துள்ளேன்.

இராஜராஜனுக்கு முன்னதாகவே தேவாரத் திருப்பதிகங்களில் சில எஞ்சியிருந்தன. அவை கோயில்களில் பாடப்பட்டன. ஆனால் தேவாரங்கள் முழுமையாக கிடைக்கவில்லை. ஒரு சமயம் இராஜராஜன் தேவாரப்பாடல் ஒன்று கேட்கிறான்.

அப்பர் பெருமான் இயற்றிய "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயும்" என்ற பாடலை அவன் கேட்டதாக நாட்டியத்துக்கு கொள்கிறோம். அப்பதிகத்தைக் கேட்டவுடன் அவன் உள்ளம் நெகிழ்கிறான். கைகளிரண்டும் உச்சி மேல் சேர்கின்றன. சிவபெருமானை, ஆடவல்ல அண்ணலை அடிபணிகின்றான். இது போன்ற மற்ற பதிகங்களையும் கேட்க விழைகிறான்.

குனித்த புருவமும் கொவ்வைச்
செவ்வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியில் பால் வெண்ணீறும்

இனித்தமுடைய எடுத்த
பொற்பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இம் மாநிலத்தே

(இது தேவாரம்)

இந்தப் பாடலைக் கேட்டதும் இராஜராஜன் மெய்சிலிர்க்கிறான். பக்தி பரவசம் ஆகிறான். 'இந்தப் பாடலை யார் பாடினார்? இன்னம் எவ்வளவு பாடல்கள் இது போல் உள்ளன? என்று ஆவலோடு கேட்கிறான்.

(இராகம்-ஆபேரி)

**பல்லவி**

யார் பாடினார் இதை யார் பாடினார்
பெண்ணே யார் பாடினார் இதை யார் பாடினார்

**அனுபல்லவி**

தீராத காதலாலே தேவாரப் பூக்கள் என
தேவாதி தேவனது திவ்ய திருவடிவை
—யார் பாடினார்

**சரணம்**

உள்ளம் நெகிழ்ந்தோட
உச்சியில் கரம் சேர
எண்ணம் எல்லாம் இறை
பக்தியிலே ததும்ப
இன்னம் இசைத்த பாக்கள்
எத்தனை உண்டு கொலோ
அத்தனையும் பருக
ஆர்வம் மிகும் வண்ணம்

— யார் பாடினார்

## பெண் அளித்த பதில்

(இராகம்-புன்னாகவராளி)

நாவுக்கரசுடன் நாவலூராளியும்
ஞானக் குழந்தையும் பாடிய பாடல் என்பர்
ஆயிரம் உண்டெனினும் ஒன்றிரண்டே உள
யாரும் அறிந்திலர் மற்ற மறைந்த இடம்

தும்பிமுகத் தேவன் தூய அருள் பெற்ற
நம்பி என்னும் பெயரோன் நாரையூர்வாழ் சிறுவன்
அம்பிகைப்பாகனை அர்ச்சிக்கும் குலச் செம்மல்
தன்னை துணைபெற்றால் நண்ணிடும பாடல் ஐய

இப்பாடல் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் பாடிய என்பர். ஆயிரக்கணக்கில் இப்பாடல்கள் இருந்தனவாம். ஆனால் நமக்கு ஒன்றிரண்டே கிடைத்துள்ளன. திருநாரையூரில் சைவ வேதியர் குலத்துப் பிறந்த சிறுவன் நம்பியாண்டார் நம்பி என்பவன் உள்ளான். அவனுக்கு பொல்லாத பிள்ளையாரின் அருள் உண்டு என்பர். அச்சிறுவனை அடைந்தால் பாடல்கள் உள்ள இடம் காணலாம் என்று பெண் கூறுகிறாள்.

## நம்பியாண்டார் நம்பி, பிள்ளையார் அருள் பெற்றது

(இராகம்-வஸந்தா)

**பல்லவி**

பொல்லாத பிள்ளையே வா, வா வா
பொல்லாத பிள்ளையே வா

**அனுபல்லவி**

கல்லாத எந்தனது சொல்லால் பரவிடினும்
தள்ளாமல் பூஜை ஏற்க நில்லாமல் இங்குடனே
—பொல்லாத

சரணம்

1 தப்பாமல் பூஜைசெய்ய அப்பாவும் சொல்லிப்
போனார்
எப்போதும் போல இந்த பூப்போது நான்
கொணர்ந்தேன்
என்பேரில் அன்பு கொண்டு இங்கே அமுது உண்டு
இப்போது என்னைக் காக்க முன்போல் எழுந்தருளி
— பொல்லாத

(இராகம்-சாமா)

2 ஏன் இன்னும் உண்ணாமல் பிள்ளையே நீ இருக்காய்
யான் செயத பூஜையில் ஏதேனும் பிழை உண்டோ
யானை முகத்தோனே யாது யான் செய்தல் வேண்டும்
போனகம் போதாதோ பெருச்சாளி ஏற்காதோ
—பொல்லாத

3 எந்தையே பள்ளிக் கேகில் தேசிகன் அடக்குவன்
சந்தமறைக் கலைகள் நீயே புகட்டிடுவாய்
அந்தமற அனைத்தும் உன்வாயால் கேட்டருள
வந்ததிப்போ தருணம் தொந்திக் கணபதியே
—பொல்லாத

## இராஜராஜன் நம்பியை வேண்டுவது

(இராகம்-பைரவி)

பல்லவி

வேதியனே உன்னை வேண்டி இங்கணைந்தேன்
விண்ணப்பம் ஒன்றுளது விளம்பிடுவேன் கேள்
—வேதியனே

**அனுபல்லவி**

ஆதியும் அந்தமும் அளந்தறியாச் சுடரை
அடியவர் பாடிய தறிந்திலமே
நாதமுழுப் பொருளை நமனை உதைத்த வரை
நற்றமிழ் இசையினால் நாளும் பரவிடவே
—வேதியனே

**சரணம்**

தும்பிக்கை பிள்ளையைத் துதித்து தெரிந்துரைப்பாய்
மூவர் பதிகங்களும் மறைந்த இடம் தனையே
சம்பு பரன் அருள் சகம் எங்கும் நிலவிட
சந்தத் தொகைதனைக் கண்டு அறிந்திட
—வேதியனே

இராஜராஜன் வேண்டுதலை ஏற்று நம்பியாண்டார் நம்பி பிள்ளையாரை வேண்டுகிறார்.

வளவர்குல வேந்தனது வார்த்தை தனைக்கேட்டு
களபமுகக் கடவுளது கழல்களையே சூடி
தெள்ளமுதத் திருப்பதிகம் உள்ள இடம் காட்ட
வள்ளல்தனை எழுந்தருள வேண்டி எதிர் நின்றான்.

நம்பியும் இராஜராஜனும் பிள்ளையாரின் எதிரில் பக்திப் பெருக்கோடு சேவித்து நிற்க, பிள்ளையார் அளித்த அருள்.

(இராகம்-மாண்டு)

[வானத்தின் மீது மயிலாடக் கண்டேன் என்ற மெட்டு]

தில்லைத்திருப்பதி தன்னை அடைந்தவர்
திருமறை கண்டிடலாம்
எல்லையிலானந்த வெளியினில் ஆடிடும்
அம்பலவனைக் கண்டிடலாம்

நாதஉருவினில் நானிலம் தோன்றிடும்
நேர்மையைக் கண்டிடலாம்
மாதவன் உருவினில் புரந்திடும் பாங்கினை
கரந்தனில் கண்டிடலாம்

ஊழியனைத்தையும் ஒடுக்கிட எரித்திடும்
கொழுந்தினைக் கண்டிடலாம்
ஆழ்ந்த அறிவினை மயக்கிடச் சூழ்ந்திடும்
மறைவினைக் கண்டிடலாம்

தூக்கிய திருவடி துயர்கெடத் துடைத்திடும்
திருவருள் கண்டிடலாம்
யோகமுனிவரர் செவியுற ஒலித்திடும்
சிலம்பினைக் கண்டிடலாம்

மாதவர் பாடல் பகர்ந்திடும் உண்மை
ஈதென அறிந்திடலாம்
மாயமீதறியா மோகநிலை போக
மன்றினை அடைந்திடலாம்

அங்கு நடராஜப் பெருமானின் சபையின் பின்னே உள்ள பிள்ளையார், எதிரில் உள்ள மூடிய அறை ஒன்றைச் சுட்டிக்காட்டுகிறார். அவ்வறையில்தான் காணாமற்போன திருப்பதிகங்கள் இருந்தன.

அம்பலத்துள் ளாடுகின்ற ஐயரது பின்னே
அய்ங்கரனும் அமர்ந்து தனதருட் கரத்தை நீட்டி
அன்பர் மனம் இன்பமுற நம்பியினை நோக்கி
இங்குளது அருட்பதிகம் அறிந்திடுவீர் என்றார்.

திருப்பதிகங்கள் இருந்த அறை மூடிக் கிடந்தது. அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் தோன்றியதால் தேவாரப் பதிகங்கள் கிடைத்தன. மூவரும் வந்ததால் தெய்வப் பதிகங்கள் கிடைத்தன என்பதை உலகுக்கு எடுத்

துரைக்கவும், அவர்களுக்கே அப்பெருமை காட்டவும் தில்லை மூவாயிரப் பெரியோர்கள் "மூவர் வந்தால் பதிகம் கிட்டும்" என்றனர். இது ஒரு தத்துவம்.

(இராகம்-நாதநாமக்ரியை)

எல்லையில் இசைப்பெருக்கை இயம்பிய மூவர் தாமும்
ஒல்லையில் உவந்தெழுந்து உதிப்பரேல் ஓலை இட்டு
தொல்லை நாள் அடைத்த தாழும் திறந்திடக்காணும் என்ன
தில்லையின் தகவறிந்தோர் தெரித்தனர் மன்னன் முன்னே.

பதிகங்களை அறியும் நுழைவாயில் மூவரே என்பதை அறிந்து பேருவகை அடைந்தான் மன்னன். அவற்றை இயற்றிய பெரியோரை வணங்கிடில் அருட்கிட்டும் என்று கண்டான். அம்பலக்கூத்தனுக்கு விழா எடுத்தான். ஆட வல்ல பெருமானுக்கு வீதி உலா எடுத்து அத்துடன் மூவர் படிமங்களையும் உலாவாக எடுத்து வந்தான்.

## மூவரும் உலா வரும் காட்சி

(இராகம்-ஆனந்தபைரவி)

பல்லவி

மூவர் வந்தாரய்யா மூவர் வந்தாரே
மூவுலகும் உய்ய முத்துச் சிவிகை ஏறி

சரணம்

1 ஆடல் மலி பெண்கள் ஆலத்தி ஏந்திட
பாடல் இசைப்பவர் பல்லாண்டு பாடிட
காளமும் சங்கமும் காதம் ஒலித்திட
தாளமும் பேரியும் தித்தித் திகும் என
—மூவர் வந்தாரய்யா

2 ஆடலரசினைப் பூவரசேத்திய
ஆதி உலாப் போன்ற ஆனந்த விழவினில்
நாடிய பாடலை நானிலம் ஏற்றிட
மூடிய வாயிலை முற்றிலும் திறந்திட
—மூவர் வந்தாரய்யா

மூவர் திருமேனிகளும் அறையின் முன் வந்ததும் கதவு திறந்தது. உள்ளே பதிகங்கள் எழுதி வைக்கப்பட்டிருந்த சுவடிகள் இருந்தன. ஆனால் கரையான் புற்று மலையென மூடிக் கிடந்தது. மனம் வருந்தினான் மன்னன். சுவடிகளைச் செதில்கள் தின்றிருந்தன. அக்கரையான் புற்றின் மீது தைலம் ஊற்றி புற்றை அகற்றினான். பல சுவடிகளை கரையான் அரித்து இருந்தது. ஆதலால் பல பாடல்கள் மறைந்தன. எஞ்சிய சுவடிகளைக் கரத்தில் எடுத்தான். கண்களில் ஒற்றிக் கொண்டான். பதிகம் கிடைத்த மகிழ்ச்சியில ஆனந்தக் கூத்தாடினான். அரனே இதுவும் உன் விளையாடலோ என்றான்.

(இராகம்-ஷண்முகப்ரியா)

**பல்லவி**

திருத்தொண்டத் தொகை தன்னைக் கண்டான்
திலதைலம் தலைபெய்து சிதல்சூழும் மலைபோக்கி
—திருத்தொண்டத் தொகை

**அனுபல்லவி**

திருவடு சிலபோகவே பல அரும் பாடல்
மறைந்தோடவே
மிகும் ஏடு கரம் ஏந்தி இசைப்பாடல் மனம் ஏற்று
—திருத்தொண்டத் தொகை

**சரணம்**

இதுவும் உன் விளையாடலோ இனி எஞ்சும்
துதிப்பாடல் உலகெங்கும் நிலையாகவே
உருக்காட்டி வரவேணுமே அருள்கூரும்
சிவகாமி உமைபாக சரண் என்று
—திருத்தொண்டத் தொகை.

## வானத்திலிருந்து அரன் அருள் செய்தல்

வேதச் சைவநெறித் தலைவர்எனும் மூவர் பாடல்
வேய்ந்தனபோல் மண்மூடச் செய்தே ஈண்டு
வேண்டுவன வைத்தோமென கேட்குமாற்றால்
வானத்தில் ஓரோசை எழுந்ததன்றே

(ஏழாம் அங்கம் முற்றும்)

# 8 புத்த பிக்குகள் வருகை

இராஜராஜன் ஒரு சிறந்த சிவபக்தன். சிறு வயது முதற்கொண்டே சிவபக்தி நிறைந்தவனாக வளர்ந்தவன். உலகமே வியக்கும் மாபெரும் கோயிலை சிவபெருமானுக்கு எடுத்தவன்; ஆதலின் அவனுக்கு 'சிவபாதசேகரன்' என்று பட்டப் பெயர். ஆயினும் அவனுக்கு அனைத்துச் சமயங்களிடமும் அன்பும் ஈடுபாடும் இருந்தது என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகளும் வரலாற்றுச் சின்னங்களும் உள்ளன.

வைணவம், சாக்தம், சமணம், பௌத்தம் ஆகிய அனைத்துச் சமயங்களும் அவன் ஆதரவு பெற்று வளர்ந்தன. திருமலை, இராஜராஜபுரம் (இன்றைய தாதாபுரம்) ஆகிய இடங்களில் அவன் காலத்தில் சமணக் கோயில்கள் எடுக்கப்பட்டு, அவன் அளித்த நிவந்தங்கள் உள்ளன.

அவன் காலத்துக்கும் முன்பிருந்தே நாகப்பட்டினம் மிகச்சிறந்த பௌத்தத்தலமாகத் திகழ்ந்தது. இராஜ ராஜனுக்கும் முந்நூறு ஆண்டுகளுக்கும் முன்னர் இராஜ சிம்ம பல்லவன் காலத்தில் சீன தேசத்து அரசன், பல்லவனின் அநுமதியுடன் இங்கே சீனயாத்ரீகர்களுக்காக ஒரு பௌத்த விஹாரம் கட்டினான். இன்றைய மலேசியா, சிங்கப்பூர், சுமத்ரா, ஜாவா ஆகிய கீழை நாடுகள் ''ஸ்ரீவிஜயம்'' என்ற பெயரில் விளங்கின. மலேசியாவின் பகுதி ''கடாரம்'' என்று அழைக்கப்பட்டது. இராஜராஜன் காலத்தில் ஸ்ரீவிஜய நாட்டைச் சூளாமணி வர்மன் என்ற அரசனும், அவனுடைய அருமை மகன் ஸ்ரீமார விஜயோத்துங்கவர்மன் என்பவனும் ஆண்டார்கள்.

ஸ்ரீமார விஜயோத்துங்கன் தன் தந்தையின் பெயரால் இராஜராஜனின் அனுமதி பெற்று, நாகப்பட்டினத்தில் ஒரு பௌத்த விஹாரம் கட்டினான். அதற்கு ''சூளாமணி வர்மம் விஹாரம்'' என்று பெயர். ஸ்ரீவிஜய அரசனின் தூதுவர்கள் இராஜராஜனின் அவைக்கு வந்தனர். அவர் களுடன் பௌத்த பிக்ஷுக்களும் வந்திருக்க வேண்டும்! இராஜராஜன் நாகப்பட்டினத்தில் சூளாமணி வர்மன் விஹாரம் கட்ட அவர்களுக்கு அநுமதி அளித்ததோடு, அதில் பிரதிஷ்டை செய்யப்பட்ட புத்தபகவானுக்குப் பூஜை, திருவிழாக்களுக்காக ஆனைமங்கலம் என்ற கிராமத்தைத் தானமாகவும் அளித்தான்.

அத்துடன் தன் பெயரால் அங்கு இராஜராஜப் பெரும்பள்ளி' என்று ஒரு பௌத்தப் பள்ளியும் நிர்மாணிக்க வகை செய்தான். இந்தச் செய்தியை இராஜ ராஜன் ஒரு செப்பேட்டில் பொறித்து வைத்துள்ளான். அதை ஆனைமங்கலம் செப்பேடு என்று அழைப்பர். அது இப்போது மேலை நாட்டில் லெய்டன் நகரில் உள்ள தால், 'லெய்டன் செப்பேடு' என்றும் கூறுவர்.

நாகப்பட்டினத்தில் ஸ்ரீவிஜய அரசன் பௌத்த விஹாரம் எடுக்க இராஜராஜன் அளித்த அநுமதியை இவ்வங்கம் குறிக்கிறது.

பௌத்த பிக்குகள் இராஜராஜனின் அவைக்கு வரு கிறார்கள். இராஜராஜனின் அரண்மனை வாயில் பெருமையை அங்குள்ளோர் எடுத்துக் கூறுகின்றனர்.

(இராகம்-நாதநாமக்கிரியை)

வாசலிது வாசலிது
ராஜராஜன் வாசலிது;
வாசலிது வாசலிது
ராஜராஜன் வாசலிது!

கலைமகளும் அலர்மகளும்
கலந்துறையும் வாசலிது;
கவிவலவர் நாள்தோறும்
களித்திருக்கும் வாசலிது!

—வாசலிது

சேரலனும் பாண்டியனும்
சேவிக்கும் வாசலிது;
இரட்டருடன் ஈழவரும்
ஏங்கி இரு வாசலிது!

—வாசலிது

சாளுக்கிகுல மன்னர்
சரண கிடக்கும் வாசலிது
கங்கருடன் காலிங்கர்
காத்திருக்கும் வாசலிது

—வாசலிது

ஆடல்புரி மாதருடன்
பாடல்மலி வாசலிது:
சூதருடன் மாகதரும்
சேர்ந்து திகழ் வாசலிது!

—வாசலிது

பல்சமயப் பெரியோரைப்
பணிந்தழைக்கும் வாசலிது
சிவசமய நெறியோரைச்
சிரம் பூணும் வாசலிது

—வாசலிது

பௌத்த பிக்குகள் இராஜராஜனின் ஓலக்க மண்டபத்துக்குள் நுழைகின்றனர்.

புத்தம் சரணம் கச்சாமி!
தம்மம் சரணம் கச்சாமி!
சங்கம் சரணம் கச்சாமி!

இவ்வாறு மும்மணிகளைக் கூறிக்கொண்டு அரியணை நோக்கிச் செல்கின்றனர். அரியணையில் அமர்ந்திருந்த இராஜராஜன் எழுந்து இறங்கி வந்து பிக்குகளை வணங்கி வரவேற்கிறான். பிக்குகள் இராஜராஜனிடம் சமஸ்கிருத மொழியில் உரையாடுகின்றனர். "சோழமகாசாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாகிய இராஜராஜப் பெருமன்னனே உனக்கு வெற்றியும் சர்வமங்களமும் உண்டாகட்டும். ஸ்ரீ விஜயாதிபதியும் கடாரத்தின் அரசனுமான ஸ்ரீமார விஜயோத் துங்கவர்மன் உமக்கு நலமும், வெற்றியும் ஓங்க வேண்டும் என விருப்பம் தெரிவிக்கிறான். சோழ நாட்டில் உள்ள நாகப்பட்டினத்தில் பிக்கு சங்கம் நிறைந்த சாதுக்கள் உள்ள இடத்தில் சூளாமணிவர்மனாகிய தன் தந்தையின் பெயரால் புத்தவிஹாரம் நிர்மாணிக்க உமது அருளை வேண்டுகிறான்" என்று கூறுகின்றனர்.

(இராகம் — ஸரஸ்வதி)

**பல்லவி**

ஜயவிஜயீ பவ ராஜராஜன்
சோளமகா சாம்ராஜ்ய சக்கரவர்த்தே-ஜய

**அனுபல்லவி**

ஸ்ரீவிஜயாதீசோ கடாஹாதிராஜோ
ஸ்ரீமாரவிஜயோத்துங்க வர்ம்மா
பவத: குசலம் விஜயம்
யசோ விருத்திம் வாஞ்சயதி-ஜய

**சரணம்**

சோள விஷயாந்தர்கத நாகிபட்டனே
பிக்ஷுசங்க மகா
சாது நிவாஸே

*ஸ்வபிது: சூடாமணி வர்ம்மண: நாம்நா*
*புத்த விஹாரம் நிர்மாதும் பவத: பிரஸாதம்*
*யாசயதி*
*— ஜயவிஜயீபவ!*

இந்தப் பாடலில் உள்ள பல சொற்றொடர்கள் ஆனைமங்கலச் செப்பேட்டில் உள்ளவை.

இவ்வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட இராஜராஜன் ''சுகதரான புத்தபகவானின் சமயத்தைப் பின்பற்றுகின்ற சாதுக்களே! உங்கள் வரவு மங்களத்தை உண்டாக்கட்டும். சாக்கிய சிம்மரின் (புத்தரின்) உபதேசமாலைகள் உலகில நன்மையை எப்பொழுதும் அளிக்கட்டும்.

''இங்கு விஹாரம் நிர்மாணிக்க நமது நண்பருக்கு (கடாரத்தரசருக்கு) அனுமதி நம்மால் வழங்கப்படுகிறது. இங்கே பிரதிஷ்டிக்கப்படும் பரமார்த்தசத்யமான பரி நிர்வாணம் அளிக்கும் புத்த பிரானுக்குப் பூஜை உத்ஸவங் கள் முதலிய தடையின்றி நடத்த ஆனைமங்கலம் என்ற கிராமம் எம்மால் அளிக்கப்படுகிறது.

''செல்வத்தின் இருக்கையான மேருமலையைக் காட்டி லும் இங்குச் செல்வம் அதிகரிக்கட்டும். மிகவும் உயர்ந்த வேலைப்பாடுடைய தோரணங்களால் அலங்கரிக்கவும் எம்பெயரால் ராஜராஜப் பெரும்பள்ளி என்பது நிர்மாணிக்கப் படட்டும். இப்பணிக்கு அமுதன், இராமன், மூவேந்த வேளான் முதலியோரை அதிகாரி களாக நியமிக்கிறேன்'' என்று கூறினான்.

(இராகம்-பந்துவராளி)

**பல்லவி**

*சோபனம் பவது பவாகமம்*
*சுகதமதானுஸாரி சாதவோ*

**— சோபனம்**

**அனுபல்லவி**

சாக்யசிம்ம உபதேச மாலிகா
மங்களானி புவி திசது சர்வதா

—சோபனம்

**சரணம்**

அனுஞாதோ அஸ்மத் சகா
அத்ர விஹார நிர்மாணே
பரமார்த்த சத்ய
பரிநிப்பாண தாயினே
பிரதிஷ்டிதஸ்ய பூஜோத்ஸவாதி
புரஸ்கிருதே
சம்பிரதத்தோ அஸ்மாபி:
ஆ னமங்கல கிராம:

—சோபனம்

அதரீ கிரியதாம்
கனககிரி விபவம்.
அலங்கிரியதாம் துங்க
விசித்ர தோரணை:
நிர்மாப்யதாம் அஸ்மந் நாம்நா
ராஜராஜப் பெரும் பள்ளி!
அதிக்ரியதாம் அமுதோ
ராமோ மூவேந்த வேளஸ்ச

—சோபனம்

இப்பாடலில் உள்ள சில சொற்றொடர்கள் ஆனை மங்கலம் செப்பேட்டில் உள்ளவை. ஸ்ரீ விஜய அரசர் மகாயான பிரிவை பின்பற்றினர். நாகார்ஜுனர் வகுத்த விஞான வாதம் என்ற தத்துவம் இங்கே சிறந்திருந்தது.

அத்தத்துவத்தில் குறிப்பாகப் பயன்படுத்தும் சொல்லே பரமார்த்த சத்யம்'' என்பது. 'பரிநிர்வாணம்' என்பது பிராகிருத மொழியில் 'பரிநிப்பானம்' என்று வரும். அமுதன் தீர்த்தகரன் என்பவனும் கிருஷ்ணன்

இராமன் என்பவனும் மதுராந்தக மூவேந்தவேளான் என்பானும் இதற்கு அதிகாரிகளாக நியமிக்கப்பட்டனர். இவர்களில் அமுதன் என்பவன் இராஜராஜன் இட்ட ஆணையை ஓலையில் எழுதினான். இவன் நித்தவினோத வளநாட்டு ஆவூர் கூற்றத்து விளத்தூரைச் சேர்ந்தவன்.

இராமன் இராஜராஜனுடைய சேனாபதி. கிருஷ்ணன் இராமன் என்பது இயற்பெயர். மும்முடிச் சோழ பிரும்ம மாராயன் என்பது பட்டப் பெயர். இவன் உய்யக் கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டுக் கோளரந்தக சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்தவன். இவ்வூர் 'அமண குடி' என்றும் அழைக்கப்பெற்றது. கும்பகோணத்துக்கு அருகில் இவ்வூர் இன்றும் உள்ளது.

கிருஷ்ணன் இராமனே இராஜராஜன் ஆணைப்படி தஞ்சைப் பெருங்கோயிலைச் சுற்றித் திருச்சுற்று மாளிகை எடுப்பித்தான். தன் ஊரான அமண்குடியில் இராஜ ராஜன் பெயரால் 'இராஜராஜேச்வரம்' என்னும கோயிலை எடுத்தான். இப்பெரும் சேனாபதி ஆனை மங்கலம் செப்பேட்டில் 'ஓலை நாயகம்' எனக் குறிக்கப படுகிறான். அதாவது, இந்த 'புத்த விஹாரத்'துக்கு ஆனைமங்கலம் கொடுத்த ஆணையை அமுதன் தீர்த்த கரன் ஓலையில் எழுத அதை மேற்பார்வையிட்டான்.

இதை ஒப்பிட்டுப் பார்த்தான் மதுராந்தக மூவேந்த வேளான். இவனுக்கு உத்தம சோழன் என்பது இயற் பெயர். இவன் அருமொழி தேவ வளநாட்டு நென்மலி நாட்டு பருத்திக் குடியைச் சேர்ந்தவன். இவர்கள் தவிர, மேலும் பல அதிகாரிகளும் இதில் பங்கு பெற்றனர். இவ்வாறு சிறப்புப் பெற்ற நாகப்பட்டினத்தில் அகழ் வாராய்ச்சியில் ஏராளமான பௌத்த சிற்பங்கள் கிடைத் துள்ளன. இராஜராஜனது விரிந்த மனப்பான்மைக்கு இந்நிகழ்ச்சி எடுத்துக்காட்டு.

(எட்டாம் அங்கம் முற்றும்)

# 9 தஞ்சைப் பெருங்கோயில் எடுத்தல்

அருண்மொழிவர்மன் என்னும் இயற்பெயருடன் தோன்றி அரசர்கட்கெல்லாம் அரசனாகி, இராஜராஜன் என்னும் பெயருடன் ஆண்ட பெரு மன்னன் ஈடு இணையிலாப் பேராளனாக எல்லாத் துறைகளிலும் சிறந்தான். தன் நாடு முழுவதும் சீராக அளந்து உலகளந்த சோழனாக விளங்கினான். மேற்கொண்ட போர்களில் எல்லாம் வெற்றி கண்டு ஜெயங் கொண்ட சோழனாகத் திகழ்ந்தான். கலைகளில் பெரிதும் ஈடுபாடு கொண்டு நித்த விநோதனாக, ராஜவித்யாதரனாகத் திகழ்ந்தான்.

கல்வியில் சிறந்தோனாகப் பண்டித சோழனாகத் திகழ்ந்தான். மறைந்த திருமுறைகளை மீண்டும் கண்டு திருமுறை கண்ட சோழனாகத் திகழ்ந்தான். ஜனங்களின் அன்புக்கு உகந்தவனாக ஜனநாதனாக வாழ்ந்தான். இவை அனைத்தும் வரலாற்றிலிருந்து அறிகிறோம். அவனது உள்ளக் கிடக்கைகள் எல்லாம், திறன் எல்லாம, ஒவ்வொரு பணியையும் தானே முன்னின்று நடத்தும் பாங்கெல்லாம சிறு வயது முதல் சிவபெருமானிடம் கொண்ட பக்தியெல்லாம், செம்பியன் மாதேவியாரும் குந்தவைப் பிராட்டியாரும் புகட்டிய பண்பெல்லாம், ‘சிவபாத சேகரன்’ என்று மக்கள் அழைத்து மகிழ்ந்தவையெல்லாம் புறத்தோற்றமாக என்றென்றும் அழியாமல் நிலைத்து நிற்கும் படி அவன் விட்டுச் சென்றதே தஞ்சைப் பெருங்கோயில்.

அக்கோயில் எடுத்து, அங்கே சிவபெருமானைப் பிரதிட்டை செய்து இராஜராஜீச்வரம் உடையார் என்ற பயர் சூட்டி நாள் தோறும் வழிபாடும் விழாக்களும்

நடைபெற வகை செய்து, வழிபாட்டின் அங்கமாக தேவாரத் திருப்பதிகங்கள் பாடவும், பாடல்களுக்கு ஆடவும் தளிச்சேரிப் பெண்டுகள் நானூறு பெண்களை அமர்த்தியதும், ஆரியம், தமிழ் என இரு மொழிகளிலும் பாடல் இசைக்கவும், நாடகம் நடத்தவும், வீணை, குழல் முதலியன இசைக்கவும், அவனும் மற்றோரும் அளித்த செப்புத் திருமேனிகளும் அணிகளும், தங்கத்தாலும் வெள்ளி செம்பு ஆகியவற்றால் அரும் கலங்கள் செய்தளித்ததும் இந்திய நாட்டு மக்கள் என்றென்றும் எண்ணி மகிழ்வுறத் தக்கவை.

அவன் பெருங் கோயிலை எடுத்ததை இந்த அங்கம் குறிக்கிறது. இதில் குறிக்கப்பட்டுள்ள செய்திகள் எல்லாம் கல்வெட்டின் அடிப்படையில் தொகுக்கப்பட்டவை. வரலாற்று நெறியில் பிறழாது பாடல்களாக இயற்றப்பட்டுள்ளன. அந்தக் கோயிலின் ஆத்ம துடிப்பைப் பிரதிபலிப்பவை.

## கோயில் எடுத்தல்

இராக மாலிகை

(இராகம்–பரசு)

**பல்லவி**

கற்கோயில் எடுத்தானே
இராஜராஜன்
கலைக்கோயில் எடுத்தானே.

—கற்கோயில்

**அனுபல்லவி**

பொற்கோயில் இதன் நிகர்
பூதலத்தில்லை எனச்
சொற்கோயில் புனைபவர்
எப்போதும் சொல்லும் வண்ணம்

– கற்கோயில்

**சரணம்**

1 விண்ணை அடைந்திட
எழுந்தது ஸ்ரீவிமானம்
சுற்றி வலம் வரச்
சூழ்ந்தது மாளிகை
கண்ணைக் கவர்ந்தது
கடைவாயிற் கோபுரம்
மண்ணுலகே இதற்கு
மாதவம் செய்ததென
—கற்கோயில்

(இராகம்-அடாணா)

2 வடதிசையிற் றிகழ்
மேருமலையை விஞ்சும்
தென்திசை மேருவென்ன
தேவர்களும் துதிக்க
எத்திசையு மிதன்
ஏற்றம் விளங்கிட
பக்தியினால் பணிந்து
பரமனைப் பரவிட
—கற்கோயில்

(இராகம்-கேதார கௌளை)

3 கல்லாலும் செம்பாலும்
கவின் சிலைகள் வடித்துக்
கண்கவர் ஓவியம்
வெண்சுதையில் விளைத்துப்
பொன்னாலும் மணியாலும்
புனைஅணிகள் படைத்துத்
தென்னாட்டிறைவரை
தினமும் வணங்கிட
—கற்கோயில்

(இராகம்-தன்யாசி)

4 பணிகள் புரிந்திடும்
பண்பினர் பலரும்
பதிகம் ஒலித்திட
பாடல் இசைப்பவரும்
நாட்டிய மாடிடும்
நானூறு பெண்டிரும்
நாளென்றும் விழவினில்
நற்பணிகள் புரிய

—கற்கோயில்

(இராகம்-பிலஹரி)

5 ஈசனைப் பூஜிக்க
ஈசான குருவையும்
ஆலயம் காணிக்க
ஆதித்தன் சூர்யனையும்
வேண்டியன வகுக்க
வேளைப் படையினையும்
காவல் புரிந்திட
மெய்க்காவலும் வகுத்து

—கற்கோயில

(இராகம்-காபி)

6 தமக்கையும் தேவியரும்
தானைத் தலைவர்களும்
தன்னுடனே இணைந்து
பணிந்திடும் பாங்களித்து
ஊர்களும் நாடுகளும்
உவந்து வணங்கிடவும்
எல்லோரும் இன்பமாய்
ஏத்தி மகிழ்ந்திட

—கற்கோயில்

(இராகம்-சாவேரி)

7 என்றென்றும் உந்தமக்கு
ஏந்தலே யானடிமை
இராஜராஜேச்சுரத்து
இனிதுறை எம்மானே
நின்றன் திருவடி
என்றன் முடியிலென
நித்தம் பணிந்து
உளம் நைந்து உருகிட

—கற்கோயில்

இராஜராஜன் தஞ்சாவூரில் எடுத்தது கற்கோயில். அதைத் 'திருக் கற்றளி' என்று கூறுகிறான். அது கற்கோயிலாக மட்டும் இல்லாமல் மாபெரும் கலைக் கோயிலாகவும் திகழ்கிறது. ஏராளமான பொற் கழஞ்சுகள் இந்தக் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டதால் பொற்கோயில் என்பதாம். கவிஞர்கள், புலவர்கள் இதற்கு ஈடான கோயில் இல்லை என்னும் வகையில் இது திகழ கிறது. மூலக்கோயிலை 'ஸ்ரீவிமானம்' என்று கல்வெட்டுக் கூறுகிறது. மிகவும் உயர்ந்த கோயிலை 'விண்ணிழி விமானம்' என்பது பண்டைய மரபு. இக்கோயிலை இராஜராஜன் 'தக்ஷிணமேரு' என்று அழைத்தான். இங்கு வழிபாடு செய்தவர் 'ஈசான சிவ பண்டிதர்' என்பவர். அவரே இராஜராஜனுடைய ராஜகுரு. ஆதித்தன் சூரியன் ஆன தென்னவன் மூவேந்த வேளான் என்பவன் இந்தக் கோயில் 'ஸ்ரீகாரியம்' ஆகப் பணி புரிந்தான். இந்தக் கோயிலில் வேளைக்கார படையினர் நியாயத்தாராகப் பணி புரிந்தனர். பிற வெளிப்படை.

(இராகம்-நாட்டை)

**பல்லவி**

கல்லிலே வெட்டுக
சொல்லிய மொழிப்படி
கொடுத்த பரிசை எல்லாம்
—கல்லிலே வெட்டுக

**அனுபல்லவி**

நாம் எடுப்பிச்ச
ராஜராஜேச்சுரக்
கோயில் அடித்தளத்துக்
—கல்லிலே வெட்டுக

**சரணம்**

1 யாம் கொடுத்ததும்
அக்கன் கொடுத்ததும்
நம் பெண்டுகள்
கொடுத்ததும் மற்றும்
கொடுத்தார் கொடுத்ததும
—கல்லிலே வெட்டுக

2 தாளமும் தட்டமும்
தள்கையும் வட்டிலும்
கலசமும் பானையும்
கெண்டி கிடாரமும்
குடமுடனே குறுமடலையும்
எண்ணிட்டு
—கல்லிலே வெட்டுக

இப்பாடல் கல்லில் வெட்டுவித்துள்ள வாசகத்தையே கொண்டு இயற்றப்பட்டது. பொருள் வெளிப்படை.

(இராகம்-அடாணா)

**பல்லவி**

திருவடி தொழுதானே
திரு இராஜராஜேச்சுரப்
பரமனின் முன் அட்டி
—திருவடி தொழுதானே

**சரணம்**

பொன்கொணர்ந்து குவித்தான்
பொருள் கொணர்ந்து குவித்தான்
அந்நிய தேசங்களை
அடிப்படுத்தும் கொடுத்தான்
தன்னுடைய பண்டாரத்தைத்
திறந்து கொணர்ந்தளித்தான்
கண்ணுடை வள்ளலைக்
கனிந்து உளத்தால் வாழ்த்தி
—திருவடி தொழுதானே

நொந்தா விளக்கெரிக்க
நற்பசுக்கள் அளித்தான்
நந்தாவனங்களுடன்
செழுநிலங்கள் அளித்தான்
செந்தாமரை நிகர்
செம்பொற் கலனளித்தான்
தந்தார் பெயரையும்
தப்பாதெழுதிவைத்து
—திருவடி தொழுதானே

இராஜராஜன் தான் கொண்டு வந்த பொருள்களை எல்லாம் இராஜராஜேச்வரமுடைய பரமசுவாமியின் திருவடிகளில் அட்டித் திருவடி தொழுதான் என்று கல்வெட்டு கூறுகிறது. இவற்றை 'ஸ்ரீபாத புஷ்பமாக' அர்ப்பணித்தான் என்றும் கல்வெட்டு கூறுகிறது.

பண்டாரம் என்பது 'பொக்கிஷம்' என்பதாம். தனது பொக்கிஷத்திலிருந்து ஏராளமான பொன்னையும் முத்துக் களையும் நவரத்தினங்களையும் அள்ளி இக்கோயிலுக்கு அளித்து அணிகலன்களாகவும், பெரும் அடுகலன்களாக வும் செய்து, அவற்றின் எடையையும், அதற்கான செலவு களையும் கல்லில் வெட்டி வைத்துள்ளான். பல மலர் வனங்களையும், நெல் விளையும் செழுமையான நிலங் களையும் இக்கோயிலில் வழிபாட்டுக்காக அளித்தான்.

தன் தமக்கை, தேவிமார், தானைத்தலைவர் ஆகிய அனைவரையும் இக்கோயிலுக்குப் பரிசளிக்க வேண்டி அவர்கள் கொடுத்ததையும் கல்லில் வெட்டி வைத்துள் ளான்.

(இராகம்-ஷண்முகப்ரியா)

**பல்லவி**

இத்தனையும் உந்தன்
அருளினில் மலர்ந்தவை
என்னமுதாகிய
எழில் சுடரே.

—இத்தனையும் உந்தன்

**அனுபல்லவி**

அத்தனையும் தந்து
பக்தியையும் அளித்த
விந்தையினை நினைந்து
வாழ்த்துகிறேன் அய்யா

—இத்தனையும் உந்தன்

**சரணம்**

மண்ணுலகு புரக்கும்
 மாப்பலம் நீஅளித்தாய்
இன்னரசு புரிய
 தனித்திறனும் அளித்தாய்
பண்மிகு பாடலையும்
 பணிந்தெடுக்க விடுத்தாய்
வெண்மதி சூடிய
 விண்ணவர் பெருமானே

—இத்தனையும் உந்தன்

இராஜராஜன் மாபெரும் வீரனாகவும் பேரரசனாகவும் திகழ்ந்த போதும், தான் என்னும் அகந்தை அற்று, அனைத்துமே இறைவனின் அருளால் மலர்ந்தது எனப் பக்தி பெருக்கோடு பணிந்து பரமனைப் பரவினான். அவனது முதிர்ந்த சிவ பக்தியின் காரணமாகவே சிவபாதசேகரன் என்று பெயர் பெற்றான். அந்தப் பெருமன்னனின் புகழ் அளத்தற்கரியது; போற்றற்குரியது. ஆதலின் அவனுடைய பேராற்றலையும் பெரும் பக்தியையும் கருவாகக்கொண்டு இந்நாட்டிய நாடகத்தை புனையும் பேறு இறை அருளால் பெற்றதென்க.

**வாழ்த்து**

(இராகம்-மத்தியமாவதி)

இராஜராஜனென்னும்
 இராஜனே வாழி
இராஜ வித்யாதர
 தேவனே வாழி
ஜெயங்கொண்ட சோழ
 சென்னியே வாழி
உய்யக் கொண்டானாண
 உலகளந்தாய் வாழி

பாண்டிய குலாசனி
 பண்டித வாழி
சிவபாதசேகரச்
 செம்மலே வாழி
அருண்மொழித் தேவனே
 அன்பனே வாழி
இராஜராஜேச்வரத்
 தெய்வமும் வாழியே.

(ஒன்பதாம் அங்கம் முற்றும்)

கொங்கு நாட்டு ஊஞ்சலூர் உதித்தோன், கௌணியன், நரசிம்ம சுப்பிரமணியர் பெயரன், இராமச்சந்திரர்க்கும அலர்மேலு அன்னைக்கும் பிறந்தோன், கரையூர் பாண்டிக் கொடுமுடி கல்வி பயின்றோன், பத்மபூஷன் தி. நா. இராமச்சந்திரரின் அன்புச் சீடன், காஞ்சி தவ முனிவர் காமகோடி ஸ்ரீசங்கராச்சரிய பெருமுனிவரின் திருவடி கமலங்களை சிரமேல் பூண்டோன், தொல்லியல் புலவன், பஞ்சநதீச்சுரன் என்னும் இயற்பெயர் கொண்டோன்

டாக்டர் இரா. நாகசாமி இயற்றிய

**இராஜராஜேச்சுர விஜயம்**

முற்றும்